# ஈசாவாஸ்ய உபநிஷத்

ஸ்ரீ சங்கரரின் உரை

தமிழாக்கம்

டாக்டர் பி.கே. சுந்தரம்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

முதற் பதிப்பு : பிப்ரவரி, 1999

இரண்டாம் பதிப்பு : ஏப்ரல், 2002

திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை : ரூ. 15.00

| | | | |
|---|---|---|---|
| ☐ | TITLE | : | EESAWASYA UPANISHAD<br>SRI SANKARAR'S URAI |
| ☐ | TAMIL<br>TRANSLATION | : | Dr. P.K. SUNDARAM |
| ☐ | LANGUAGE | : | TAMIL |
| ☐ | EDITION | : | Second Edition, April, 2002 |
| ☐ | No. OF PAGES | : | x + 62 = 72 |
| ☐ | PUBLISHED BY | : | VANATHI PATHIPPAKAM,<br>13, DEENADAYALU STREET,<br>THYAGARAYA NAGAR,<br>CHENNAI – 17. |
| ☐ | PRICE | : | Rs. 15.00 |

Printed at : Malar Printers, Chennai - 600 034. ✆ 822 4803

Chennai Book Fair
11 JAN 03

# பதிப்புரை

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்பது தமிழ் மறை. பார்க்குமிடந்தொறும் எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்திருப்பது இந்தச் செம்பொருள்; ஒவ்வோர் உயிரிலும் நுணுக்கரிய நுண்ணுணர்வாகத் தன்னை இனங்காட்டிக் கொண்டு விளங்குவதும் இந்த உண்மையே. இதே பொது உண்மைதான், 'காக்கை குருவி எங்கள் சாதி' என்று மகாகவி பாரதியைப் பாடவைத்தது. எல்லா உயிரும் உண்மையில் ஒருயிர் என்றால் மனிதரும் தேவரும், விலங்கும் பறவையும் ஒரே இனம் என்றுதானே பொருள்படும்! இதனால் 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்!' என்று உலகச் சமுதாயம் ஒன்று மொத்தமாக மலர்கிறது.

பாரத நாட்டின் உயிர்நிலை என்று சொல்லப்படும் பெருமை உடையவை உபநிடதங்கள். வேதங்களின் முடி, அல்லது முடிந்தமுடிபாகத் திகழ்கின்றவை இவை. 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்ற மூதுரையும் உபநிடதங்களும் "உண்மை ஒன்றே; அதன் வடிவங்களே நாம் எல்லாம்" என்று, உலக வாழ்க்கையின் ரகசியத்தை எடுத்துக்காட்டி, நம்மை நெறிப்படுத்துகின்றன.

இத்தகைய உபநிடதங்களுள் சிறப்பானவை பத்து. இவற்றிற்கு ஆதி சங்கரர் உரை எழுதி, இவற்றின் நுட்பங்களையும் உட்பொருளையும் மனிதச் சமுதாயத்தின் மீதுள்ள அக்கறையால் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். இவை சம்ஸ்கிருத மொழியில் இருக்கின்றன. இவற்றின் மொழிபெயர்ப்புக்கள் பல மொழிகளிலும் செய்யப்

பட்டிருக்கின்றன. தமிழ் மொழியிலும் இவற்றில் சில மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன.

ஆனால் பத்து உபநிஷதங்களுக்கும் ஆதிசங்கரர் செய்த உரைகளையும் ஒரு தொகுதியாக வெளியிட வேண்டும் என்று ஓர் எண்ணம், இறைவன் திருவருளாலும் குருவின் திருவருளாலும் எனது உள்ளத்தில் தோன்றியது. இது வளர்ந்து செயலில் நிறைவேறும் காலமும் வந்து கூடியது.

இதன் விளைவாக, சென்னைப் பல்கலைக் கழகத்தில் பல ஆண்டுகள் தத்துவத் துறையில் பேராசிரியராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்ற டாக்டர் பி.கே. சுந்தரம் அவர்களோடு ஒருநாள் பேசினேன். அவரும் ஆர்வத்தோடு இந்த மொழிபெயர்ப்பைச் செய்து தரும் பணியை ஏற்றுக் கொண்டார்.

முதலில், **ஈசாவாஸ்ய உபநிஷத்தும், கேனோபநிஷத்தும்** ஸ்ரீ சங்கரரின் உரைகளோடு அவரால் தமிழாக்கம் செய்யப்பட்டன. இவை இரண்டும் தனித்தனிப் புத்தகங்களாக இப்போது வெளியிடப்படுகின்றன. சம்ஸ்கிருத மொழியிலுள்ள மூல நூல்கள் இவற்றில் தரப்படவில்லை. அவை எங்கும் கிடைக்கும் என்பதாலும், மொழி பெயர்ப்பைப் படித்து அதன் பின்னர் மேலும் இவற்றைப் பயில வேண்டும் என்ற அவாவினை உண்டு பண்ணுவது மட்டும் எனது சிறப்பு நோக்கம் என்பதாலும் மூல சம்ஸ்கிருத உரை இவற்றில் தரப்படவில்லை.

கூடியவரையில் பழகு தமிழில் இந்த மொழி பெயர்ப்பு தரப்படவேண்டும் என்று மொழி பெயர்ப்பாசிரியர் முயற்சி செய்திருக்கிறார். ஆங்காங்கு நேர்ந்திருக்கக் கூடிய இலக்கணப் பிழைகளை ஆசிரியர் உணர்ந்து எதிர்பார்த்து தமிழுலகம் மன்னிக்கவேண்டும் என்றும் என் மூலமாகக் கேட்டுக் கொள்கிறார்.

இதைப்போலவே மற்ற உபநிடதங்களும் ஸ்ரீ சங்கரரின் உரைகளோடு வெளிவர இருக்கின்றன. கட–உபநிஷத்தின் உரை அச்சில் இருக்கிறது.

வானதி பதிப்பகத்தின் இம்முயற்சியினைத் தமிழுலகம் வரவேற்று மேலும் இப்பணியைத் தொடர ஊக்குவிக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

அன்பன்

**வானதி திருநாவுக்கரசு**

# முகவுரை

பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை ஏதொரு நூலது போலே

—மகாகவி பாரதியார்

பத்து உபநிஷத்துக்களுக்கு ஸ்ரீ சங்கரர் இயற்றிய உரைகளைத் தமிழில் தரவேண்டும் என்று எனது மதிப்பிற்குரிய அருமை நண்பர் திரு. வானதி திருநாவுக்கரசு எனக்கு ஓர் அன்புக் கட்டளையிட்டார். இதை ஏற்று, முதலில் ஈசாவாஸ்ய-உபநிஷத்திற்கும், கேன-உபநிஷத் திற்கும் ஸ்ரீ சங்கரரின் உரைகளைத் தமிழாக்கம் செய்து இந்த இரண்டு மெய் நூல்களும் வானதி பதிப்பகத்தாரால் இப்போது வெளியிடப்படுகின்றன.

கூடிய வரையில் சொல்லுக்குச் சொல் நேராக மொழி பெயர்க்க வேண்டும் என்று முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. இது முற்றும் நிறைவேறமுடியாமல் போயிருக்கலாம். அன்பர்கள் மன்னிக்க வேணும். இது தவிர, இந்த மொழி பெயர்ப்புக்களில் நேர்ந்திருக்கக்கூடிய குற்றங்களையும் பிழைகளையும் பெரியோர்கள் மன்னித்து குணங்கள் இருந்தால் ஏற்க வேணுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

இன்னும் மற்ற எட்டு உபநிஷத்துக்களையும் மொழி பெயர்க்கும் பணியைத் தொடர்ந்து முடித்து விடவேண்டும் என்று திரு. வானதி திருநாவுக்கரசு உறுதி பூண்டிருக்கிறார். கட உபநிஷத் அச்சில் இருக்கிறது. இப்பணி செவ்வனே முடிய குருவருளையும் திருவருளையும் வேண்டுகிறோம்.

பத்து உபநிஷத்துக்களையும் வரிசைப் படுத்தும் முறை சிறிது வேறுபடுவதுண்டு. கீழ்க் கண்ட வரிசையைக் கடைப்பிடிக்கலாம் என்பது எங்கள் திட்டம்.

ஈச–கேன–கட–ப்ரச்ன–முண்டக–மாண்டுக்ய தித்திரி |
ஐதரேயம் ச சாந்தோக்யம் ப்ருஹதாரண்யகம் தச ||

இந்தப் பத்து உபநிஷத்துக்களின் உரைகளையும் ஒரு தொகுதியாகத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்குத் தர வேண்டும் என்பது வானதி பதிப்பகத்தாரின் உயரிய நோக்கம். அது இனிது நிறைவேறுமாக. இந்த நூல்களை ஸ்ரீ சங்கரரின் பாதத் தாமரைகளுக்கு பணிவான காணிக்கை ஆக்குகிறோம்.

இந்தத் தமிழ் மொழி பெயர்ப்புக்கள் வெளிவர வேண்டிய தேவையை உணர்ந்து என்னை இம் முயற்சிக்கு வெகுநாட்களுக்கு முன்பே தூண்டியவர், நண்பர், இந்திய வங்கியில் பெரும் பொறுப்பில் இருந்து ஓய்வு பெற்ற திரு. எம். திருநாவுக்கரசாகும். அவருக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த இரண்டு உபநிஷத்துக்களின் மொழி பெயர்ப்பையும் சிறந்த முறையில் அச்சிட்ட வானதி பதிப்பகத்தாருக்கு என் பாராட்டுக்கள்.

பி.கே. சுந்தரம்

# பொருளடக்கம்

# மொழிபெயர்ப்பாளரின் முன்னுரை

'உபநிஷத்' என்னும் சொல்லில் 'உப', 'நி''ஸத்' என்னும் மூன்று பகுதிகள் இருக்கின்றன. ''உப'' என்பதற்கு 'அருகில்' என்பது பொருள். ''நி'' என்றால் 'உறுதியாக' என்றும், ''ஸத்'' என்றால் 'அழிப்பது' என்றும் பொருள். ஆசாரியன் அருகில் இருந்து பணிவிடை செய்து, உறுதியான மெய்யறிவைப் பெற்று அதன்மூலம் அறியாமையை அகற்றுவது 'உபநிஷத்' என்ற சொல்லின் மொத்தப்பொருள். இந்த மெய்யறிவைத் தரும் புத்தகத்துக்கும் உட்கருத்தாக உபநிஷத் என்னும் பெயர் வந்து விட்டது. ''நெய் என்பது நீண்ட ஆயுள்'' என்று ஒருவர் சொன்னால், நெய்யைச் சாப்பிட்டுவந்தால், நீண்ட ஆயுள் வாழலாம் என்பது குறிப்பு. அதுபோல உபநிஷத் என்னும் புத்தகம் அதைப் படிப்போருக்கு மெய்யறிவைக் கொடுக்கும் என்பது கடோபநிஷத்திற்கு சங்கரரின் முகவுரை.

இன்னும் முண்டகோபநிஷத் (சங்கரரின் உரை I, 1.1).

ஈசாவாஸ்ய உபநிஷத் சுக்ல-யஜுர்-வேதத்தைச் சார்ந்தது. வியாஸர் வேதங்களை நான்கு பிரிவுகளாகப் பிரித்தார். அதனால்தான் அவருக்கு 'வியாஸர்' (வகுத்தவர்) என்ற பெயரே ஏற்பட்டுவிட்டது. அப்பிரிவுகள் ரிக், யஜுர், ஸாம, அதர்வ வேதங்கள் என்று பெயர் பெற்றன. பின்னும், ஒவ்வொரு வேதத்தையும் பின்வரும் நான்கு உட்பிரிவுகளாகச் செய்தார் : (i) ஸம்ஹிதா (ii) ப்ராம்ஹணம் (iii) ஆரண்யகம் (iv) உபநிஷத். அவருடைய நான்கு சீடர்களுக்கும் இந்த

வேதங்களையும் அவற்றின் உட்பிரிவுகளையும் உபதேசித்தார். பைலர் என்பவருக்கு ரிக்வேதத்தையும், வைசம்பாயனருக்கு யஜுர் வேதத்தையும், ஜைமினிக்கு ஸாம வேதத்தையும், ஸுமந்துவுக்கு அதர்வ வேதத்தையும் அளித்தார்.

இவர்களில் வைசம்பாயனருடைய சீடர்களான சரகாத்-வர்யுக்கள் தங்கள் ஆசார்யரின் சார்பில் அவர் நலனுக்காகத் தவம் செய்தார்கள். அவர்களுள் யாக்ஞவல்க்யரும் ஒருவர். ஆசார்யரைப் பார்த்து யாக்ஞவல்க்யர் ''பகவானே! இந்தச் சீடர்களெல்லாம் செய்யப் போகும் தவத்தினால் என்ன பயன் விளைந்துவிடப் போகிறது? இவர்கள் வலிவில்லாதவர்கள். யாரும் செய்ய முடியாத தவத்தை நான் தங்களுக்காகச் செய்வேன்'' என்றார்.

வைசம்பாயனர் இது துடுக்குத்தனமான பேச்சு என்று எண்ணிச் சினம் கொண்டார். ''நீ மற்ற என் சீடர்களை யெல்லாம் அவமதிக்கிறாய். எனக்கும் உனக்கும் இனி யாதொரு சம்பந்தமும் இல்லை. என்னிடம் இருந்து நீ கற்றுக் கொண்டவற்றையெல்லாம் திரும்பக் கொடுத்து விட்டு இங்கிருந்து போ!'' என்று கடிந்தார்.

தேவராதரின் புதல்வரான யாக்ஞவல்க்யர் உடனே தான் வைசம்பாயனரிடமிருந்து கற்ற யஜுர் வேதத்தின் பகுதிகளை யெல்லாம் கக்கினார். பிறகு அங்கிருந்து வெறுப்புடன் வெளியேறினார்.

மற்றச் சீடர்களெல்லாம் யாக்ஞவல்க்யரிடமிருந்து விழுந்த வேதபாகங்களை தித்திரிப் பறவைகளாக உருவம் எடுத்துக் கொண்டு சாப்பிட்டார்கள். இதனால் அந்த வேதபாகங் களுக்குத் 'தைத்திரீய-சாகை' எனும் பெயர் ஏற்பட்டது. 'சாகை' என்றால் கிளை.

வெளியில் புறப்பட்ட யாக்ஞவல்க்யர் தமக்கென்று புதிதான பேருண்மைகளைத் தெரிந்து கொள்வதற்காகச்

சூரியனைக் குறித்துத் துதி செய்தார். இதனால் மகிழ்ந்த சூரிய பகவான் ஒரு குதிரை உருவமெடுத்து, யாக்ஞவல்க்யருக்கு அதுவரை யாரும் அளித்திராத வேதங்களை உபதேசம் செய்தார். குதிரைக்கு 'வாஜி' என்பது ஸம்ஸ்க்ருதச் சொல். குதிரை உருவத்தில் வந்து உபதேசிக்கப்பட்டதால் இந்த வேத பாகங்களுக்கு 'வாஜஸனீ' என்று பெயர் ஏற்பட்டது. இவை சுக்ல-யஜுர்வேதம், ('சுக்லம்' என்றால் வெண்மை) என்றும் அழைக்கப்பட்டன. இதற்கு மாறாக தைத்திரீய சாகை கிருஷ்ண (கருப்பு) யஜுர்வேதம் எனப்பெயர் பெற்றது.

யாக்ஞவல்க்யர் வாஜஸனியைப் பதினைந்து பிரிவு களாகச் செய்து, காண்வர், மாந்த்யந்தினர் என்பவர்களுக்கு அருளினார். எனவே, சுக்ல-யஜுர்வேதத்தில் காண்வ-சாகை, மாந்த்யந்தின- சாகை என்ற இரு பெரும் பிரிவுகள் (பாடங்கள்) உண்டாயின. ஆசார்ய சங்கரர் காண்வ - சாகையை தனக்கு ஆதாரமான பாடமாகக் கொண்டு உரைசெய்தார். பிருஹதாரண்யக - உபநிஷத்தும் ஈசாவாஸ்ய - உபநிஷத்தும் வாஜஸனீ என்ற இந்த சுக்ல-யஜுர்வேதத்தைச் சேர்ந்தவை.

உபநிஷத்துக்களிலே ஈசாவாஸ்ய-உபநிஷத் முதலில் வைத்து எண்ணப்படுகிறது. ''ஈசாவாஸ்யம்'' என்னும் சொல் லோடு இந்த உபநிஷத் தொடங்குவதால் இது 'ஈசாவாஸ்ய உபநிஷத்' எனப்பட்டது. சுருக்கமாக ஈசோபநிஷத் என்றும் இதை அழைப்பதுண்டு.

மந்த்ரோபநிஷத் அல்லது ஸம்ஹிதா - உபநிஷத் என்று அழைக்கப்படும் ஒரு பெருமையும் இதற்கு உண்டு. சுக்ல-யஜுர்வேதத்தின் மந்த்ரப்பகுதியிலேயே, மந்த்ரங்களின் தொகுதியான ஸம்ஹிதாப் பகுதியிலேயே இந்த உபநிஷத் அமைந்திருப்பதால் இந்தப் பெயர் ஏற்பட்டது. இந்த உபநிஷத், மந்த்ரங்களாக அமைந்திருக்கிறது. சுக்ல-யஜுர்வேதத்தில் வாஜஸனேயி-ஸம்ஹிதையில் முதல் 39 அத்யாயங்களில்

வாழ்நாளில் செய்ய வேண்டிய காரியங்கள் (கர்மாக்கள்) சொல்லப்படுகின்றன. எனவே கர்ம - காண்டம் என்று இவை அழைக்கப்படுகின்றன. இவற்றை அடுத்து நாற்பதாம் அத்தியாயத்தில் 18 மந்த்ரங்களைக் கொண்டது ஞான (மெய்யறிவு) காண்டமான ஈசாவாஸ்ய-உபநிஷத்.

எல்லா உபநிஷத்துக்களும், பிரம்மம் ஒன்றே உண்மை என்று ஒருமுகமாக உணர்த்துவதால், அவற்றில் உண்மையறிவு ஒன்றே திரும்பத்திரும்ப வற்புறுத்தப்படுகிறது. இது ஆறு வகை யான சான்றுகளால் (ஷட்-லிங்கங்களால்) அறியப்படுகிறது. அவையாவன : (1) உபக்ரம-உபஸம்ஹாரம் (தொடக்கமும் முடிவும்) (2) அப்யாஸம் (மறுபடி மறுபடி வலியுறுத்துதல்) (3) அபூர்வதா (ஏற்கனவே அறியப்படாத புதிய செய்தியைத் தெரிவித்தல்) (4) பலம் (உபநிஷத்துக்களைப் படிப்பதன் பலனை எடுத்துக்காட்டுதல்) (5) அர்த்தவாதம் (தான் சொல்ல வந்ததைப் புகழ்ந்துரைத்தல்; அதற்கு மாறுபாடானதை நிந்தித் தல்) (6) உபபத்தி (பகுத்தறிவு ஏற்றுக் கொள்ளும் வகையில் கொள்கையை நிரூபித்துக் காண்பித்தல்). இந்த ஆறும் ஈசாவாஸ்ய-உபநிஷத்தின் மந்த்ரங்களில் காணப்படுகின்றன. (1) ''ஈசாவாஸ்யம்'' என்பது தொடக்கம் (உபக்ரமம்); ''ஸ பர்ய காத் சுக்ரம்'' என்று முடித்தல் (உபஸம்ஹாரம்). (2) ''அநேஜத் ஏகம் ததந்தரஸ்ய ஸர்வஸ்ய'' என்பது திரும்பத் திரும்ப வலியுறுத்தல் (அப்யாஸம்) (3) ''நைநத் தேவா ஆப்னுவன்'' என்பது புதிதான செய்தி (அபூர்வதா) (4) ''கோ மோஹ: க: சோக: ஏகத்வம் அநுபச்யத:'' என்பது பலன் (பலம்) (5) ''அஸுர்யா நாம தே'' என்பது வேற்றுமையின் நிந்தனை; அத்வைதத்தின் புகழ்ச்சி (அர்த்தவாதம்) (6) ''தஸ்மின் அபோ மாதரிச்வா ததாதி'' என்பது பகுத்தறிவு கொண்டு பொருத்தம் கூறுதல் (உபபத்தி). எனவே, இந்தச் சான்றுகளினால் ஈசாவாஸ்ய- உபநிஷத், பரம்பொருள் ஒன்றே உள்ளது என்ற சத்தியத்தைக் கூறுகின்றது என்பது தெளிவு. எல்லா உபநிஷத்துக் களுக்கும் மேற்சொன்ன ஆறு லிங்கங்களும் பொருந்தும்.

வேதாந்தங்களாகிற எல்லா உபநிஷத்துக்களும் இவ்வாறு பேருண்மையான அத்வைதத்தையே சொல்லுகின்றன.

ஈசாவாஸ்ய-உபநிஷத்தில் கூறப்படுவது பரம் பொருளைப் பற்றிய அறிவாகும். அதாவது ப்ரஹ்ம- வித்யை யாகும். இதனால் இந்த உபநிஷத்தின் மந்த்ரங்கள் வைதிகச் சடங்குகளில் பயன் படுத்தப்படுவதில்லை.

உலகத்துக் காரியங்களைச் செய்து கொண்டிருப்பது என்பதும் பரம் பொருள் பற்றிய மெய்யறிவும் ஒன்றுக் கொன்று ஒவ்வாதவை. 'ப்ரஹ்ம' என்றும் ''ஆத்மா'' என்றும் வேதாந்த மாகிற உபநிஷத்துக்களில் சொல்லப்படுகின்ற பரம்பொருள் (1) தூய்மையானது. (2) தனக்கு வேறாக இரண்டாவது இல்லாதது. (3) என்றும் உள்ளது; காலத்தைக் கடந்தது. (4) உருவமில்லாதது. (5) எங்கும் நீக்கமற நிறைந்தது. பரம் பொருளின் இந்த இயல்புகள் உலகத்தில் வைதிகச் சடங்குகள் உட்படக் காரியங்களைச் செய்யும் நிலைக்கு முற்றும் முரணானவை. காரியங்களைச் செய்யும் போது அவற்றின் பயன்களாக வருபவை நான்கு : (1) புதிதாக ஒன்றை உண்டாக்குதல் (2) மாற்றத்தை உண்டாக்குதல் (3) ஓரிடத்தி லிருந்து வேறிடத் தை அடைதல் (4) மாசை நீக்கிச் சுத்தப் படுத்துதல். உதாரண மாக, (1) வயலில் பயிர் செய்து புதிதாகத் தானியங்களை உண்டாக்குதல் (உற்பத்தி) என்னும் செயலாகும். (2) பாலைத் தயிராக்குதல் என்பது மாற்றம் (விகாரம்) என்னும் செயலாகும். (3) ஒரு கிராமத்திலிருந்து இன்னொரு கிராமத்திற்குச் செல்வது, அடைதல் (ஆப்தி) என்னும் காரியமாகும். (4) அழுக்கான கண்ணாடியைத் துடைத்தல், சுத்தம் செய்தல் (ஸம்ஸ்காரம்) என்னும் செயலாகும்.

இந்நான்கு வகைச் செயற்பாடுகளும் மெய்ப்பொருளான ஆத்மாவில் பொருந்தமாட்டா. ஏனெனில்; (1) ஆத்மா என்றும் உள்ளது; எனவே அதை உற்பத்தி செய்ய வேண்டிய தேவை இல்லை. (2) ஆத்மா மாறாத ஒரே சீரான தன்மையது; எனவே

மாற்றம் என்ற செயற்பாடும் அதனிடம் இல்லை. (3) ஆத்மா எங்கும் நிறைந்தது; அது இல்லாத இடமே இல்லை. எனவே, இடம்விட்டு இடம் போய் அதை அடைவது என்ற காரியமும் இல்லை. (4) ஆத்மா தூய்மையின் வடிவம். எனவே, அதைச் சுத்தப்படுத்தும் வேலையும் இல்லை. ஆகையினால், பரம் பொருளைப்பற்றிய அறிவில், செயலுக்கு இடமில்லை.

மேலும், செயல் செய்யும் ஒருவனுக்கு ''நான் இந்தக் காரியத்தைச் செய்கிறேன். நான் இன்ன இனத்தைச் சேர்ந்தவன்; என்னிடத்தில் காரியத்துக்குக் குந்தகங்களான குருடு, செவிடு, கூன் முதலிய குறைகள் இல்லை'' என்ற தன்னைப்பற்றிய எண்ணங்கள் இருக்க வேண்டும். இவையொன்றும் முழுமுதற் பொருளான ஆத்மா என்ற மெய்ப்பொருளிற்குக் கிடையாது. எனவே மெய்ப்பொருளைப் பற்றிய அறிவைப் பெற்றவனுக்குக் காரியங்கள் இல்லை.

இதெல்லாம் சரி; மெய்ப்பொருளைப்பற்றிய அறிவு இன்னும் பெறாதவர்கள் நிலை என்ன? இதை ஈசாவாஸ்ய-உபநிஷத்தின் இரண்டாவது மந்த்ரம் தெளிவாகச் சொல்கிறது. ''இங்கு இந்த உலகத்திலேயே காரியங்களைச் செய்து கொண்டு நூறு வருஷம் உயிர்வாழ முயலவேண்டும்'' என்று அழுத்தமாக அது கூறுகிறது. காரியம் செய்வது என்றாலே அதன் பலன் களை அனுபவிக்கவும் சித்தமாக இருக்க வேண்டும். ''காரியம் செய்வேன்; ஆனால் அதன் பலன்கள் என்னைப் பற்றக் கூடாது'' என்று சொல்வது முறையாகாது. அப்படிப் பலன்கள் பற்றாம லிருக்க வேண்டுமானால், பலனில் இச்சை வைக்காமல் காரியங் களைச் செய்ய வேண்டும். நமக்குப் பிடித்த பலன்களுக்கு ஆசைப்பட்டு அதற்குரிய முயற்சிகளைச் செய்வது, கட்டாய மாகச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யாமல் விட்டு விடுவது, செய்யக்கூடாத கெட்ட காரியங்களைச் செய்து விட்டு, அதன் தீய பலன்களால் வரும் துன்பம் மட்டும் வேண்டாம் என்று சொல்வது, இவையெல்லாம், பலன் நம்மை

நிச்சயம் பற்றிக் கொள்ளும் வழிதான். தனக்கு வரும் சொந்த இன்பமோ துன்பமோ, விருப்போ வெறுப்போ, இவற்றைப் பாராட்டாமல், கடமை என்று பெரியோர்களாலும் மறை நூல்க ளாலும் ஏற்படுத்தப்பட்ட பணிகளைச் செய்து கொண்டிருப்பது ஒன்றுதான் அவற்றின் பலன்கள் நம்மைப் பற்றாமலிருக்க ஒரே வழி. ''காரியமும் செய்ய வேண்டும், ஆனால் பலன்களும் தன்னைப் பற்றக்கூடாது'' என்றால், இதைத் தவிர வேறு வழி யில்லை. பலன் பற்றாதது மட்டுமல்ல: மேற்சொன்ன வழி யினால் உள்ளமும் தூய்மைப்படும். எனவே ''நல்ல காரியங் களை அவசியம் செய்து வரவேண்டும்'' என்பது மெய்யறிவு பெறாதவர்களுக்கு ஈசாவாஸ்ய-உபநிஷத்தின் இரண்டாவது மந்த்ரம் இடும் கட்டளை, என்று சங்கரர் தனது உரையில் எடுத்துக் காட்டுகிறார். ''காரியங்களைத் துறத்தல்'' என்ற துறவு நிலை மெய்யறிவு பெற்றவர்களுக்குத்தான். அப்படிப் பெறாதவர் களுக்குக் காரியம் என்பது கடைமையாகும். அதுவும் மனிதனின் முழு ஆயுட்காலமான நூறு ஆண்டுகள் வாழ்ந்து அத்தனை ஆண்டுகளும் கடைசிவரை மெய்ந் நூல்களில் சொல்லியிருக்கிற காரியங்களையும் மற்ற அன்றாட வாழ்விற் குத் தேவையான காரியங்களையும் செய்து வரத்தான் வேண்டும். மெய்யறிவு பின்னால் ஏதோ ஒரு காலத்தில் வருவதற்கும் இதுதான் ஒரேவழி. சங்கரர் எல்லோரையும் துறவு பூணச் சொல்லி, உலக வாழ்க்கையை வெறுத்து ஓடச் சொல் கிறார் என்பதெல்லாம் உண்மையன்று. மெய்ப்பொருள் ஒன்றே என்று உணர்வு நிலைக்கப் பெற்றவர்கள் மட்டுமே துறவு நிலைக்குத் தகுதி பெற்றவர்கள்; மற்றவர்கள் துறவு மேற் கொள்வதில் நாட்டம் இருந்தாலும், அதற்கு வேண்டிய பக்குவம் வருவதற்காகவே காரியங்களைத் துறக்காமல், பிழை இல்லாமல், அயராமல் தளராமல் செய்து வரவேண்டும். அவை நல்ல காரியங் களாகவும் இருக்க வேண்டும். ஆனால் அவற்றைக் கடமையாகச் செய்து வரவேண்டும்; உள்ளத் தூய் மைக்காகச் செய்துவர வேண்டும். தூய உள்ளத்தில்தான்

மெய்யறிவு தோன்றும். அப்பொழுது துறவு தானே வந்தெய்தும். அது வரும் வரையில், துறவுக்குரிய பக்குவம் வரும் வரையில், ஒன்றையும் விடாமல் காரியங்களை நன்றாகச் செய்ய வேண்டும்.

துறவியின் பக்குவ நிலை ஞான நிஷ்டை எனப்படும். பக்குவம் இன்னும் வராதபோது காரியங்களைச் செய்து வரும் நிலை கர்ம நிஷ்டை எனப்படும்.

இவ்விரண்டு நிலைகளையும் (நிஷ்டைகளையும்) ஈசாவாஸ்ய-உபநிஷத்தின் முதல் இரண்டு மந்த்ரங்களும் முறையே தெரிவிக்கின்றன. உலகியல் வாழ்க்கை வாழ விரும்பு பவன், அத்தகைய விருப்பத்தை உள்ளத்தில் எங்காவது ஒரு மூலை யிலாவது தேக்கியிருப்பவன், காரியங்களினின்று பிறழாமல் பின் வாங்காமல் தன் கடமைகளைப் பயன்கருதாது செய்து கொண்டு நூறு ஆண்டுகள் வாழ ஆசைப்படவேண்டும் என்பது கர்ம நிஷ்டை. அதை இரண்டாவது மந்த்ரம் சொல்கிறது.

''எதற்கும் ஆசைப்படாதே! துறவினால் உன்னைக் காத்துக்கொள்! பரம்பொருளையன்றி வேறு ஒன்றும் இல்லை. விட்டு விடுதலையாகிக் காட்டுக்குச் செல்! அப்படிச் சென்ற பிறகு காரியங்கள் செய்ய வேண்டிய வாழ்க்கைக்குத் திரும்பாதே! உயிர்வாழ்வதிலோ, அல்லது வாழ்வை முடித்துக் கொண்டு இறப்பதிலோ கருத்தை வைக்காதே!'' என்பது ஈசாவாஸ்ய - உபநிஷத்தின் முதல் மந்தரம் சொல்லும் துறவு நிலை. இது மெய்யறிவு எனும் ஞானத்தினால் மட்டும் வருவதால் ஞான-நிஷ்டை எனப்படுகிறது.

ஞான-நிஷ்டை என்ற மெய்யறிவு நிலையையும் கர்ம - நிஷ்டை என்ற செயற்பாட்டு நிலையும் சேர்த்து ஒருவனே ஒரே நேரத்தில் பயிலுவது என்பது இயலாது. ஏனெனில், இவை யிரண்டும் எதிரும் புதிருமான நிலைகள். இவற்றினிடையே உள்ள வேற்றுமை மலையைப் போல அசைக்க முடியாதது என்பது சங்கரருடைய முடிவு. ஞான வழி எல்லாவற்றையும்

துறக்கின்ற வழி; செயற்பாட்டு வழியான கர்ம நிஷ்டையோ, உலகியலோடு ஒட்டிய நடைமுறை.

மெய்யறிவு நிலை என்பது எந்தவித வேற்றுமையுமின்றி தானே தன் சொந்தத் தன்மையிலேயே இருப்பதுதான். ''ஆத்மா என்ற இந்த உலகங்கள் எங்களுக்கு இருக்கும் பொழுது, மனைவி மக்களாகிற சொந்த பந்தங்களினால் நாங்கள் என்ன செய்யப் போகிறோம்'' என்று பிருஹதாரண்யக - உபநிஷத் (IV-4.22) மெய்யறிவு பெற்றவர்களின் துறவு நிலையை உணர்த்துகிறது. ஈசாவாஸ்ய-உபநிஷத்தும், மெய்யறிவு பெறாதவர் களையும் பெற விரும்பாதவர்களையும் எள்ளி நகையாடுகிறது. அவர்கள் இருண்ட உலகங்களை விரும்பி அலைகிறார்கள்; உண்மையறியாத குருடர்களாகத் தடுமாறுகிறார்கள் என்று இகழ்கிறது. ச்வேதாச்வதர - உபநிஷத்தும் (IV-21) ''மெய்யறி வைப் பெற விரும்பி, முற்றும் துறந்த துறவிகளுக்கு உண்மையின் உபதேசமானது செய்யப்படுகின்றது'' என்று பேசுகிறது.

உலக வாழ்வின் கடமைகளை ஒழுங்காகச் செய்து வருவதால், வேதத்தில் சொல்லப்பட்ட கடமைகளை முறை யாகச் செய்து முடிப்பதால் உண்டாகும் மிகப் பெரிய பலன் என்னவென்றால், மனது தூய்மையாகி, அறிவு தெளிந்து, மெய்யறிவு பெறுவதற்கு வேண்டிய தகுதியும் பக்குவமும் உண்டாகிவிடுவதுதான். எனவே, மெய்யறிவை முன்னிட்டுச் செய்யும் துறவே மிகச் சிறந்தது என்றாலும், அது கைவரப் பெறாதவர்கள், தத்தம் காரியங்களைத் தவறாது செய்து வருவதன் மூலம் அந்த வாய்ப்பைப் பெறலாம். எனவே ஒன்றும் செய்யாமல் சும்மாயிருத்தல் என்ற சோம்பல், சங்கரருக்கு உடன்பாடல்ல. மெய்யறிவு பெறாதவர்கள் ஓயாது காரியம் செய்து கொண்டு உலகத்தின் வழிமுறைகளைக் காப்பாற்றி, அதன்பயனாக, மெய்யறிவைப் பெறும் பக்குவத் தைப் பெறவேண்டும். மெய்யுணர்வு பெற்றவர்கள் நிலை

வேறு. ''எல்லாம் இறைவனே, நோக்குமிடந்தோறும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனைத் தவிர வேறு ஒன்றும் இல்லை'' என்று உணர்ந்த அவர்களுக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை; ஆதலின் செய்யும் காரியமும் இல்லை. மற்றவர்கள் காரியம் செய்து கொண்டே இருக்க வேண்டும்; அவ்வாறு நூறு ஆண்டுகள் சுறுசுறுப்பாக உழைக்க வேண்டும் என்பார் சங்கரர்.

**செயலும் உபாஸனையும்:**

இதில் இன்னும் ஒரு செய்தியையும் ஈசாவாஸ்ய-உபநிஷத் நமக்குத் தெரிவிக்கிறது. வெறும் வைதிகச் சடங்கு களையோ, வேறு காரியங்களையோ மட்டும் செய்து வருவதும் அவ்வளவு உயர்ந்த வழி இல்லை. தெய்வ உபாஸனையும் பயிலவேண்டும். ஆனால் வெறும் தெய்வ உபாஸனை அல்லது சிந்தனையை மட்டும் செய்து வருவதும் நல்லதில்லை. இரண்டையும் சேர்த்துச் செய்துவருவதுதான் நல்ல பலன்களைத் தரும்.

எனினும் கடமையையும் உபாஸனைகளையும் எவ்வளவு தான் நன்றாகச் செய்து வந்தாலும், அவற்றின் பலன் நல்லதாக இருந்தாலும், அவை நமக்கு கடைசி கடைசியான முக்தியைத் தரமாட்டா. மெய்யறிவினால் மட்டுமே நமக்கு முக்தி கிட்டும். ஆயினும், செயற்பாடும் உபாஸனையும் முக்திக்கு வேண்டிய மெய்யறிவைப் பெறுவதற்கு உதவுகின்றன. தூய உள்ளத்தில் தான் மெய்யறிவு பிறக்கும். தூய உள்ளத்தில்தான் அந்த மெய் யறிவைப் பெற வேண்டும் என்ற இச்சையும் பிறக்கும். ஓர் ஆசிரியனை அடைந்து வேதாந்த உபதேசம் பெறும்பொழுது, அந்த உபதேசத்தை நன்கு புரிந்து கொள்வதற்கும் தெளிந்த அறிவாற்றலும் தூய உள்ளமும் மிகமிகத் தேவை. இந்தத் தகுதியைப் பெறுவதற்குச் செயற்பாடும், உபாஸனையும் நேர் ராஜபாட்டை இல்லை எனினும் கொஞ்சம் எட்டிய சுற்று வழி (ஆராத்-உபகாரகம்).

## வெளிப்படாத காரணமும் வெளிப்படையான காரணமும்

உலகத்திற்கு சடப்பொருளான முதற் காரணம் மாயை. (இயற்கை என்றழைக்கப்படும்) ப்ரக்ருதி. இது 'அவ்யாக்ருதம்' எனப்படுகிறது. அதாவது கருவாக வெளிப்படாத காரணம்; நுட்பமாக இருப்பது. ஹிரண்ய கர்ப்பர் வெளிப்படையான காரணம். இவர் வ்யக்தம் எனச் சொல்லப்படுகிறார். அதாவது மூலப் பரம்பொருளின் வெளிப்படையான தோற்றமாவார். இவரைப் படைப்புக் கடவுள் என்று சொல்லலாம். வெளிப் படையான இவரை காரிய-ப்ரஹ்மம் என்றும் சொல்வதுண்டு. இயற்கைச் சக்தியையும் ஹிரண்யகர்ப்பர் என்ற படைப்புக் கடவுளையும் சேர்த்தேதான் வழிபடவேண்டும்; உபாஸிக்க வேண்டும். தனித்தனியே இவற்றை ஒருவன் வழிபட்டால், பலன் ஒன்றும் கிட்டாது. மாறாக, இருண்ட உலகங்களைத்தான் அவன் அடைவான். அதாவது, அறியாமையில்தான் அவன் உழன்று கொண்டிருப்பான். ஈசாவாஸ்ய-உபநிஷத், இந்தச் சட இயற்கையை அவ்யாக்ருதம் (வெளிப்படாதது) என்றும், அஸம் பூதி (வெளிப் படையாகத் தோற்றத்தை அடையாதது) என்றும், அவித்யை (அறியாமை) என்றும் பலவகையாகப் பெயரிட்டு அழைக்கிறது. இதற்கு வேறாக, ஹிரண்யகர்ப்பர் என்ற தெய்வசக்தியை ஸம்பூதி (தோற்றம் பெற்றது), வ்யாக்ருதம் (வெளிப்பட்டது) என்று பல பெயரிட்டு அழைக்கிறது.

ப்ரக்ருதி என்னும் இயற்கையை அல்லது பௌதிக முதற் காரணத்தை மட்டும் தனியாக வழிபடுகின்றவர்கள் என்ன பலனை அடைகிறார்கள் என்றால் அந்த பௌதிக இயற்கை யோடு ஒன்றி ஒடுங்கி விடுகிறார்கள். ஹிரண்யகர்ப்பர் என்ற தெய்வ சக்தியை மட்டும் தனியாக வழிபடுகின்றவர்களோ ஹிரண்ய கர்ப்பரிடத்திலேயே கலந்து விடுகிறார்கள். இந்த இரண்டு பலன்களுமே உண்மையை முற்றும் அறியாத வட்டத் திற்குள் வருபவைதான். ஆனால் யார் இந்த ஹிரண்யகர்ப்

டணயும் இயற்கையையும் சேர்த்து வழிபடுகிறார்களோ, அவர்கள் முறையே (1) மரணத்தை வெல்லுதல் (2) மரண மின்மை என்ற நல்ல பலன்களை அடைகிறார்கள். 'மரணத்தை வெல்லுதல்' என்றால், சிறுமை, ஆசை, முதலிய குற்றங்களை நீக்கிக் கொண்டு, யோக ஸித்திகளைப் பெறுதல் என்ற நிலையை அடைதலாகும். ''மரணமின்மை'' என்பது உலக முதற்காரணமான இயற்கையில் ஒடுங்கி விடுதலாகும். ஆனால் இவையிரண்டுமே கடைசி கடைசியான முக்தி அன்று.

ஹிரண்யகர்ப்ப உபாஸனை, ப்ரக்ருதி உபாஸனை என்ற இந்த இரண்டு வழிபாடுகளும் முறையே (1) மானுட (2) தெய் வீகச் செல்வங்களாகும். இவையிரண்டுமே உலக வாழ்க்கை என்னும் எல்லைக்குள் அடங்குவதாக இருக்கின்றன. உடலால் நிகழும் செயற்பாட்டு வழியும், உபாஸனை என்ற மனத்தின் பால் நிகழும் செய்கையும், மேலான முக்திக்கு நேரான வழிகளல்ல. இவற்றால் நேரடியாக முக்தி வராது. ஆனால் நேரடி முக்திக்கு இவை வழிசெய்து கொடுக்கும். அவ்வளவே. மெய்யறிவான ''நானும் பரம்பொருளும் வேறில்லை'' என்ற அனுபவம்தான் முடிந்த முடிவான முக்திக்கு ஒரே வழி. எனவே, முக்திக்கு நேர் வழியான துறவு என்ற மெய்யறிவு நிலையையே உபநிஷத் நமக்கு அறிவிக்கிறது.

இரண்டற்ற பரம்பொருளைப் பற்றிய மெய்யறிவைப் பெறுவதோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், தேவர்களும் அஸுரர்களே ஆவர். அவர்களுடைய இருப்பிடங்களும் அஸுர உலகங்களேயாகும். அவை மெய்யறிவில்லாத வெறும் குருட்டு இருட்டினால் மறைக்கப்பட்டிருக்கின்றன. மெய்யறிவு பெறாத வர்கள் எல்லாரும் இந்த இருண்ட உலகங்களைத்தான் சென்று அடைகிறார்கள்.

இன்னும் சொல்லப்போனால், மெய்யறிவு பெறாதவர் கள் தங்களைத் தாங்களே ''கொன்று'' கொள்கிறார்கள். கொலையுண்டு மாண்டுபோன பிணத்திற்குச் செயலும்

உணர்வும் இல்லாமல் போவதுபோல, தன்னைப் பற்றிய மெய் யறிவு பெறாதவர்களும், அப்படிப் பெற வேண்டும் என்ற எண்ணம் கூட இல்லாதவர்களும், இறந்துவிட்டவர்களுக்குச் சமானம். இதனால், அறிவில்லாத பாமரர்கள் ''தங்கள் ஆத்மா வைக் கொலை செய்தவர்கள்'' என்று இங்கு இகழப் படுகிறார்கள். இதற்குத் 'தண்டனை'யாக அவர்கள் பெறுவது தான் ஓயாது மாறிவரும் பிறப்பும் இறப்புமாகும்.

### மெய்ப்பொருளின் தன்மை

மெய்ப்பொருள் இரண்டற்றது. தன்னைத்தவிர வேறு இரண்டாவது இல்லாததால், அது 'அசையாதது' என்று கூறப் படுகிறது. 'நிலை தவறாதது' என்று பொருள். தன்னைத் தவிர வேறு ஒன்று இருந்தால் அது பூரணமாகாது. குறைவுபட்டிருப்ப தால் அது தன் நிலை தவறிவிடுவதற்கு இடமும் ஏற்பட்டு விடும்.

அதே நேரத்தில், இந்தப் பூரணப் பொருள்தான் உண்மையில் உள்ள பொருள் என்பதால், இருப்பதுபோல் தோற்றமளித்து, முடிவில் அழிந்துபடும் எந்த மாயையையும் இது கடந்து நிற்கிறது. உலகம் என்ற மாயை ஒரு பொய்த் தோற்றம்; எப்பொழுதும் மாறிக் கொண்டேயிருப்பது, ஓடிக் கொண்டே இருப்பது. இப்படி மாறிக் கொண்டே இருக்கும் பொய்மாயத் தோற்றமெல்லாவற்றையும் கடந்து, அவற்றிற்கு எட்டாததாக இருப்பது மெய்ப்பொருள். புத்தியும், மனதும் இந்திரியங்களும் மாயையின் காரியங்களானபடியால் இந்த மெய்ப் பொருளை அவை அறிய முடியாது. இதனால் தான், ''மனத்தை விட மெய்ப்பொருள் வேகமுடையது'' என்றும், ''அவை எவ்வளவுதான் விரைவாக இயங்கினாலும் அவற் றிற்கு முன்னே மெய்ப் பொருள்தான் போய் நிற்கும்'' என்றும் ஈசாவாஸ்ய-உபநிஷத் கூறுகிறது.

சதா மாறிக் கொண்டேயிருக்கும் மாயையின் விளை வாகத் தோன்றியிருக்கின்ற எல்லாப் பொருள்களுக்கும்

மெய்ப்பொருளே உயிருக்குயிராய் இருப்பதால், அது ஒவ் வொரு பொருளிலும் தனித்தனியாக வேறுபட்டு நிற்பது போலப் பாமர மக்களுக்குத் தோன்றுகிறது. ஆனால் எல்லா வேற்றுமைகளிலும் ஒரே மெய்ப்பொருளைக் காண்பதுதான் மெய்யறிவு.

**மெய்யறிவும் காரியமும் சேர்ந்தே பயிலப்படலாமா?**

இனி, காரியம் செய்யும் வழியையும் மெய்யறிவு பெறும் வழியையும் சேர்த்தே பயின்று வருவது நல்லது என்று ஏன் சொல்லக்கூடாது? காரியத்தையும் உபாஸனையையும் சேர்த் தே பயிலவேண்டும் என்று கூறியதுபோல இங்கும் செய்ய லாமே என்றால், அது சரியன்று. உபாஸனையும் காரியமும் ஒன்று சேரலாம். ஏனெனில் அவற்றிற்கிடையே எந்த விரோதமும் இல்லை. இரண்டுமே காரியத்தின் இரண்டு முறைகள்தான்; அடிப்படையில் இரண்டும் ஒன்றுதான்.

ஆனால் மெய்யறிவு பெறும் ஞானவழியின் முறை காரியத்தினின்றும் வேறுபட்டது. அதைச் செய்ய வேண்டியவர் கள் வேறு; அதன் பலன் வேறு. பற்றற்ற துறவோடு பயில வேண்டியது மெய்யறிவு என்ற வேதாந்தம், உலகத்து இன்பங் களையும் அவற்றின் பொருட்டு உண்டாகும் மனத்தின் உந்துதல் களையும் வெறுத்து வீடுபேறாகிய விடுதலையை மட்டும் நாடும் வழி. ''நான் பரம்பொருளே, பரம்பொருளே நான்'' என்ற உண்மையை ஆசாரியன் மூலமாக தீர ஆராய்வது; அப்படி ஆராய்ந்த பின் அந்த உண்மையை விடாமல் மனத்தில் நினைப்பது; பின் உண்மையை உணர்ந்து அந்த உணர்வாகவே நிற்பது என்பவையே இந்த வழியின் நிலைகள். இதற்குத் தகுதி பெற்றவர்கள் இந்த உலகத்து இன்பங்களையும் மறு உலகத்தின் இன்பங்களையுமே துறக்கச் சித்தமாய் இருப்பவர்கள். நிலைத்தது எது, நிலையாமல் மாறிக் கொண்டிருப்பது எது

என்று பிரித்தறியும் ஆற்றல் பெற்றவர்கள், மன அடக்கமும் புலனடக்கமும் கொண்டவர்கள். விடுதலை (மோக்ஷம்) பெறுவதைத் தவிர வேறு எதிலும் இச்சை இல்லாதவர்கள்.

காரியம் இதனின்று முற்றும் மாறுபட்டது. ஆசை யுள்ளவர்கள்தாம் செயலில் ஈடுபடுகிறார்கள். இவர்கள் மன அடக்கத்தையும் துறவையும் முழுதும் பெறாதவர்கள். இவ் வுலக இன்பத்தையோ அல்லது மறு உலக இன்பத்தையோ விரும்புகிறவர்கள். எல்லாம் ஒரு மெய்ப்பொருளே என்னும் பேருண்மையை உணராதவர்கள். செய்யும் காரியம், செய்யும் போது ''நான்'' என்ற முனைப்பு, அதன் பயனை விரும்பி முயலுதல் என்ற வேற்றுமைகளை உண்மை என்று நம்பு கின்றவர்கள். ''நான்'' என்ற அகங்காரமே ஒரு பொய் என்று அறியாதவர்கள். உலகம், உண்மையோ, பொய்யோ என்று நிர்ணயிக்க முடியாத ஒரு மாயை; அது ''எல்லாம் ஒன்றே'' என்ற பேரறிவினால் அழிக்கப்பட்டுவிடும் என்ற உணர்வில் ஊன்றி நிற்க முடியாதவர்கள்.

எனவே செயல் செய்பவர்கள், மெய்யறிவு வழியை மேற்கொள்பவர்கள் என்ற இந்த இருசாராரும் ஒருவருக் கொருவர் எதிரெதிரான வழியில் போகின்றவர்கள். இவ்விரு வருக்கும் உள்ள வேற்றுமை மலைபோல் அசைக்க முடியாதது என்று முன்னர் சொல்லப்பட்டது.

**சில குறிப்புக்கள்**

ஈசாவாஸ்ய-உபநிஷத்தில் வரும் சில சொற்களுக்கு அங்கங்கே எது பொருத்தமானதோ அத்தகைய பொருள் அமைத்துக் கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, 'வித்யா' என்ற சொல் பொதுவாக 'மெய்யறிவு' என்றுதான் பொருள் படும். ஆனால் சில இடங்களில் ''வித்யா'' என்பது உபாஸனை அல்லது 'இடையறாது சிந்தித்தல்' என்றும் பொருள்படும். இடத்திற்குத் தகுந்தாற்போல் புரிந்து கொள்ள வேண்டும்.

சங்கரர் தமது ஈசாவாஸ்ய-உபநிஷத் உரையில், இதைக் கவனமாக நமக்குக் காட்டியிருக்கிறார். 'அவித்யை' என்பது 'அறியாமை' என்று நேரடியாகப் பொருள்படும். அறியாமை யின் காரணமாக, உலகத்தையும் அதில் நமது வாழ்வையும் நாம் செய்து கொண்டிருக்கிற செயல்களையும் அது குறிக்கும். மாறாக உலகம் ஒரு மாயையான தோற்றம் என்றும், அதில் நம் வாழ்க்கையும் நாம் செய்யும் செயல்களும், ''நான் செயல் செய்கிறேன், என்ற எண்ணமும் ஒரு பொய்யான தோற்றம்'' என்றும், உண்மையில் இருப்பது பரம்பொருளே என்றும் அந்தப் பரம்பொருளும் நாமும் வேறல்ல என்றும் அறிவது மெய்யறிவு (வித்யா) எனப்படும். அப்பரம்பொருளையன்றி வேறு ஒன்றும் இல்லை என்று உறுதியாக உணரும் நிலை இது.

காரியம் ஒன்றும் இல்லாத பரம்பொருளும் பொய்யறி வினால் விளையும் காரியங்களும் ஒருக்காலும் இணைய முடியாது. ''வித்யை'' என்ற மெய்யறிவும் 'அவித்யை' என்ற பொய் யறிவும் அதன் விளைவான காரியங்களும் ஒரே சமயத்தில் ஒருவனிடத்திலே சேர்ந்து இருக்க முடியாது என்று சங்கரர் கூறுவார். இதற்கு வேறாக 'வித்யா' என்ற சொல்லிற்கு உபாஸனை (தொடர்ந்து சிந்தித்தல்) என்று பொருள் கொண் டால், இந்த வித்யையையும் அவித்யையையும் ஒருவனே ஒரே சமயத்தில் இணைந்து செய்யலாம். உபாஸனை என்பதும் ஒரு காரியம்தான்; மனத்தின் காரியம். இதனால் 'உபாஸனை' என்ற பொருளில், வித்யையும் அவித்யையோடு சேரலாம் என்று சங்கரர் அறிவுறுத்துகிறார்.

ஆனால், 'மெய்யறிவு' என்ற பொருளுடைய வித்யை, அவித்யையோடு ஒருக்காலும் சேரமுடியாது. இருளும் ஒளியும் எப்படி ஒருங்கிணைய முடியும்? ''காரியமே இல்லாத பரம் பொருளே நான்'' என்று உணர்ந்த ஒருவன் காரியம் செய்ய மாட்டான். அப்படி உணர்ந்த ஒருவன் மெய்யுணராதவனாக ஒரே சமயத்தில் எப்படி இருக்க முடியும்?

சங்கரரின் இந்தக் கொள்கையை நன்றாக மனத்தில் வைத்துக் கொண்டால் அவருடைய ஈசாவாஸ்ய-உபநிஷத் உரையைப் புரிந்து கொள்ள வசதியாயிருக்கும்.

சுருக்கமாகச் சொன்னால் 'வித்யை' என்ற சொல்லிற்கு 'மெய்யறிவு' என்று பொருள் கொண்டால், அது 'அவித்யை' என்ற காரியத்தோடு ஒரு போதும் சேராது. 'வித்யை' என்ற சொல்லிற்கே 'உபாஸனை' என்று பொருள் கொண்டால், அப்பொழுது அது 'அவித்யை' அல்லது காரியத்தோடு சேர்ந்தே ஒருவனால் செய்யப்படலாம்.

இதுபோலவே ஈசாவாஸ்ய-உபநிஷத்தில், ஹிரண்யகர்ப் பரையும், ப்ரகிருதியையும் சேர்த்தே உபாஸனை செய்வது மேலான பலனைத்தரும் என்றும், தனித்தனியே உபாஸனை செய்தால் அப்படிப்பட்ட மேலான பலன் கிடைக்காது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஹிரண்யகர்ப்பரை இந்த உபநிஷத்து, 'ஸம்பூதி' அல்லது 'உண்டானவர்' 'தோன்றி வெளிப்பட்டவர்' என்று அழைக் கிறது. இதற்கு மாறாக, 'ப்ரகிருதி' அல்லது மூலப் பௌதிகப் பொருளை 'அஸம்பூதி' அல்லது 'இன்னும் தோற்றங் கொள்ளாமல் கருப்பொருளாக இருப்பது' என்று சொல்கிறது.

ஸம்பூதி என்ற ஹிரண்யகர்ப்பரை உபாஸனை செய் தால், அணிமா முதலிய எட்டு பேராற்றல்களும் உண்டாகும்; ஹிரண்யகர்ப்பருடைய உலகமான ஸத்யலோகம் கிட்டும். அஸம்பூதி என்ற ப்ரகிருதியை உபாஸிப்பதால், அந்தப் ப்ரகிருதியிலேயே ஒடுங்குவது என்ற பலன் உண்டு.

இவ்விரண்டு உபாஸனைகளையும் சேர்த்தே செய்தால், காரியங்களைச் செய்து கொண்டு உலகவாழ்வினின்றும் மீண்டு, என்றும் வாழ்கிற இறவாமையைப் பெறலாம். இங்கு 'இறவாமை' என்பது முக்தியைக் குறிக்காது. நீண்ட நிம்மதி யைத்தான் குறிக்கும். 'இறப்பு' (ம்ருத்யு) என்ற சொல்லும் இங்கு

மரணத்தைக் குறிக்காது. காரியங்களைச் செய்து கொண்டு உலக வாழ்வில் உழலும் நிலையைத்தான் குறிக்கும்.

இவ்வாறு, இச் சொற்களுக்கு இடத்திற்குத் தகுந்தாற் போல் பொருள் செய்து கொள்ள வேண்டும் என்பதைச் சங்கரர் காட்டியிருக்கிறார். இதை நினைவில் வைத்துக் கொண்டால், சங்கரரின் உரையைப் புரிந்து கொள்வது எளிதாக இருக்கும்.

ஸ்ரீ குருப்யோ நம:

# ஈசாவாஸ்ய உபநிஷத்

சாந்தி மந்த்ரம்

**ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्ण उदच्यते ।**
**पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥**

**ओं शान्तिः शान्तिः शान्तिः**

*ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணம் உதச்யதே ।*
*பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாசிஷ்யதே ॥*

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

ஓம். அதுவும் முழுமையானது; இதுவும் முழுமை யானது. முழுமையிலிருந்து முழுமை வெளிவந்தது. முழுமையி லிருந்து முழுமையை எடுத்தபின்பும் முழுமை முழுமையாகவே மிஞ்சி நிற்கிறது.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

## சங்கரரின் பொது முன்னுரை

'ஈசாவாஸ்யம்' என்பதோடு தொடங்கும் மந்த்ரங்கள் (வைதிகக்) காரியங்களில், சடங்குகளில், பயன்படுத்தப்பட வில்லை. ஆனால் காரியங்களுடன் சேராத ஆத்மாவின் (மெய்ப் பொருளின்) உண்மையான இயல்பை வெளிப்படுத்துவதற்கு அவை பயன்படுகின்றன. மெய்ப் பொருளின் உண்மையான

இயல்பு என்பவை தூய்மை, பாவங்களின்மை, ஒருமை, என்றுமுள தன்மை, உருவமின்மை, எங்கும் நிறைந்திருத்தல் முதலியன. இவை பின்னர் குறிப்பிட்டுச் சொல்லப்படும். இது (இத்தகைய இயல்பு) காரியத்திற்கு முரணானதால், இந்த (ஈசா வாஸ்ய) மந்த்ரங்கள் (வைதிகச்), சடங்குகளில் (கர்மங்களில்) பயன் படுத்தப்படாதது பொருத்தமேயாகும். ஏனெனில், ஆத்மா (மெய்ப்பொருள்), மேலே சொன்ன அதன் இயல்பின்படி, அதன் உண்மையான தன்மைக்கு ஏற்ப (1) புதிதாக உண்டாக்கப்படுவ தன்று (2) மாற்றக் கூடியதன்று (3) (புதிதாக) அடையக் கூடிய தன்று (4) தூய்மைப்படுத்தப்பட வேண்டியதன்று (5) (எந்தச் செயலும்) செய்வதுமன்று; (6) (அச்செயலின்) பலனை நுகர்வதுமன்று. இப்படி இல்லாமலிருந்தால் மட்டுமே அது காரியத்தில் அங்கமாக இடம் பெறும்.

மேலும் (வேதத்தின் முடிந்த முடிபான) எல்லா உபநிஷத்துக்களும் ஆத்மாவின் உண்மையான இயல்பை நிச்சயிப்பதோடு நிறைவு எய்தி விடுகின்றன. ஸ்ரீமத் பகவத் கீதையும், மற்ற மெய்ந்நூல்களும், முக்தியைப் பற்றிப் பேசும் பொழுது இதைத்தான் (தங்கள்) நோக்கமாகக் கொண்டுள்ளன. எனவே, பல வகையாக இருத்தல், செயல் செய்தல், பயனை நுகர்தல் முதலியனவும், மாசு, பாவம் முதலிய தன்மைகளும் ஆத்மாவிற்கு இருப்பதாக, சாதாரணமாக உலகம் நம்பு கின்றதற்கு ஏற்ப (அந்த அடிப்படையில்தான்) எல்லாக் காரியங்களும் விதிக்கப் பட்டிருக்கின்றன.

ஏனெனில் செயல் செய்வதற்குத் தகுதி என்ன என்பது பற்றித் தேர்ந்த நிபுணர்கள் கூறும்போது, ஒரு மனிதன் காரியத்தின் பலன்களை நாடிச் செல்லும் பொழுது, (அந்தக்) காரியத்திற்குத் தகுதி பெறுகிறான் என்று சொல்லுகிறார்கள்.

இந்தப் பலன்கள், கண்கூடாக நம்மால் பார்க்கப்படக் கூடிய உள்ளத்து உயர்வு முதலியவையாக இருந்தாலும் சரி, அல்லது நாம் பார்க்க முடியாத சுவர்க்கம் முதலிய மறுமை

உலகத்தைச் சேர்ந்தவையாக இருந்தாலும் சரி, ஒருவன் ''நான் ஓர் இருபிறப்பாளன்; காரியம் செய்யும் தகுதிக்குத் தடையாக இருக்கக்கூடிய ஒற்றைக் கண்ணனாக, கூனனாக இருத்தல் முதலிய குற்றங்கள் என்னிடம் இல்லை'' என்று எண்ணினால் அவன் செயல் செய்யத் தகுதியுடையவனாகிறான்.

ஆகையினால், ஆத்மாவின் (மெய்ப்பொருளின்) உண்மை யான இயல்பை வெளிப்படுத்துவதன் மூலம், (ஈசாவாஸ்ய உபநிஷத்தில் அடங்கிய) இந்த மந்த்ரங்கள் ஆத்மாவைக் குறித்து இயற்கையாகவே (நமக்கு) இருக்கும் அறியாமையை நீக்கி, அதன் மூலம் மெய்ப் பொருள் ஒன்றே என்பது பற்றிய மெய்யறிவை உண்டாக்குகின்றன. உலகவாழ்வின் தன்மை களான துயரம், மயக்கம் முதலியவற்றைக் களைவதற்கு இந்த மெய்யறிவுதான் வழி.

இந்த ஈசாவாஸ்ய மந்த்ரங்களைச் சுருக்கமாக விளக்கு வோம். (இதைப் பயிலுவதற்குத்) தகுதியுள்ள மாணவர், விளக்கப்படும் பொருள், (உபநிஷத்) மந்த்ரங்களுக்கும் இப்பொருளுக்கும் இடையே உள்ள தொடர்பு, இதன் நோக்கம் என்ற இவை மேற்காட்டியவாறு கூறப்பட்டுவிட்டன.

இவை அனுபந்த-சதுஷ்டயம் (அல்லது ஒரு நூலின் நான்கு இலக்கணங்கள்) எனப்படும்.

(ஸ்ரீ சங்கரரின் பொது முன்னுரை முடிந்தது. இனி ஈசாவாஸ்ய-உபநிஷத்தின் மந்த்ரங்களும் அவற்றிற்கு ஸ்ரீ சங்கரர் எழுதிய சிறப்பு உரையும் தரப்படுகின்றன).

*மந்த்ரம் - 1*

**ओं ईशावास्यं इदं सर्वं**
**यत्किञ्च जगत्यां जगत् ।**
**तेन त्यक्तेन भुञ्जीथा :**
**मा गृधः कस्यस्वित् धनम् ॥**

*ஓம். ஈசாவாஸ்யம் இதம் ஸர்வம்*
*யத் கிஞ்ச ஜகத்யாம் ஜகத்।*
*தேன த்யக்தேன புஞ்ஜீதா:*
*மா க்ருத: கஸ்யஸ்வித் தனம்॥* -1-

ஓம். இவ்வுலகில் அசைவது (அசையாதது) எல்லாம் இறைவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. எனவே, (மனிதன்) தன்னைப் பற்றின்மையினால் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். மற்றெவருடைய செல்வத்திற்கும் ஆசைப்படக்கூடாது.

### சங்கரரின் உரை

ஆணை செலுத்துபவர் 'ஈட்' (எனப்படுகிறார்). (அவ் விதம்) ''ஆணை செலுத்துபவரால்'' என்பது ''ஈசா'' என்ற (இந்த முதல் மந்த்ரத்திலுள்ள சொல்லின்) பொருள். எல்லா வற்றின் மேலும் ஆணை செலுத்துபவர் இறைவன்; இவர் எல்லா உயிருக்கும் ஆத்மாவாக இருக்கின்ற பரம்பொருள். எல்லா வற்றிற்குள்ளும் உறையும் ''ப்ரத்யகாத்மா''வாக அல்லது உள்ளிருக்கும் மெய்ப்பொருளாக விளங்குகிற அவர் எல்லா உயிர்களையும் ஆளுகின்றார். இந்த உண்மையான, தன் (சொந்தத் தன்மையான, எல்லாவற்றிற்கும்) ஆத்மாவாக இருப்பதன் மூலம், ஆட்சி செலுத்துகிற அந்த இறைவனால் இது (இந்த உலகம்) வியாபிக்கப்பட்டிருக்கிறது. (இது என்பது) என்ன? உலகின் கண் அசைவது எல்லாமும், அசைவது (மட்டு மின்றி) அசையாததும் (கூட) என்ற பொய்யான இதெல்லாம், அந்தப் பரம்பொருளான ஆண்டவனால், எல்லாவற்றிற்கும் உள்ளே ஆத்மாவாக இருக்கும் அதன் மெய்யியல்பினை உணர்ந்து, ''நானே இது அத்தனையும்'' என்ற மெய்யுணர் வினால் போர்க்கப்படவேண்டும் (விலக்கப்படவேண்டும்).

சந்தனம், அகரு முதலிய வாசனைப் பொருட்களில் நீர் முதலியவற்றின் சேர்க்கையால் (உண்டாகும்) ஈரம் முதலிய வற்றின் காரணமாக ஏற்படும் தாற்காலிகமான துர்நாற்றமானது, அவற்றை நன்றாகத் தேய்க்கும் பொழுது வெளிப்படுகின்ற

அவற்றின் உண்மையான இயல்பான நறுமணத்தால் மறைக் கப்பட்டுவிடுவது போல, தன்னுடைய (சொந்த இயல்பான) இந்த ஆத்மாவின்கண், செயல் செய்வது, அதன் பயனை நுகர் வது முதலியவற்றை இயற்கையாகவே தன்மையாகக் கொண்ட பன்மையான உலகம், (பொய்யாகக்) கற்பிக்கப் பட்டிருக்கிறது; ''அசைவது'' என்ற (சொல்) மற்ற (அசையாதது என்பன) வற்றையும் குறிப்பதனால், உருவமும் பெயரும் உடையதும், மாறும் தன்மையுடையதுமான பொருட் கூட்டம் யாவும், உண்மையான பரம்பொருளைப் பற்றிய சிந்தனையின் மூலம் கைவிடப்படவேண்டியவையாகும்.

இவ்வாறு, (நம்முடைய) ஆத்மாவாகவே இருக்கும் இறைவனைப் பற்றிய சிந்தனையோடு கூடியவனுக்கு, (தன்னு டைய) மக்கள் (மேல் ஆசை) முதலிய மூன்று, (மக்கள், செல்வம், உலகவாழ்க்கை என்ற மூன்று) பற்றுக்களையும் விட்டு விடுவதில்தான் உரிமை அல்லது அதிகாரம் உள்ளது; காரியங்களைச் செய்வதில் அல்ல.

(மந்த்ரத்திலுள்ள) 'த்யக்தேன' என்ற சொல்லிற்கு ''தியாகத்தினால்'' என்பது பொருள். இறந்துபோன அல்லது கைவிடப்பட்ட மகனோ, வேலைக்காரனோ, தொடர்பு அற்றுப் போய்விட்ட காரணத்தினால், ஒருவனைக் காப்பாற்றுவதில்லை. இங்கோ, தியாகத்தினால் உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங் கள் என்று உபநிஷத் கூறுகிறது. ஆகையால், 'தியாகத்தினால்' என்ற (சொல் குறிக்கும் (துறவு) தான் வேதத்தின் பொருள். (மந்த்ரத்திலுள்ள) 'புஞ்ஜீதா:' என்பதற்கு ''காப்பாற்றிக் கொள்க'' என்பது பொருள்.

''இவ்வாறு ஆசைகளைத் துறந்த நீ பொருட்செல்வத்தில் மனதைச் செலுத்தாதே! உன்னுடைய சொந்தச் சொத்தாயினும், பிறருடைய சொத்தாயினும் எவருடைய சொத்திலும் ஆசை வைக்காதே!'' என்பது (மந்த்ரத்தினுடைய கடைசிப்பகுதியின்) பொருள். (மந்த்ரத்திலுள்ள) ''ஸ்வித்'' என்பது பொருளில்லாத அசை.

அல்லது, (இந்த முதல் மந்த்ரத்திற்கு வேறு வகை யாகவும் பொருள் சொல்லலாம்). ''ஆசைப்படாதே!'' ஏன் (ஆசைப்படக்கூடாது)? ''எவருடைய செல்வத்தின் பேரிலும்'' என்ற (சொற்றொடர்) (அப்படி ஆசைப்படுவது) முடியாத காரியம் என்று மறுக்கும் பொருளுள்ளது. (உண்மையில்) எவருக்கும் (சொந்தமான) செல்வம் என்ற ஒன்று இருந்தால் (அல்லவா) ஆசைப்படலாம்? ''இதெல்லாம் ஆத்மாவே'' என்ற இறைவனைப்பற்றிய சிந்தனையினால், எல்லாம் (மிச்ச மில்லாமல்) விடப்பட்டு விட்டது. எனவே, எல்லாம் ஆத்மா வினுடையதே; ஆத்மாவே எல்லாமும். (இதில் தன் செல்வம், பிறர் செல்வம் என்பதெல்லாம் ஏது?). ஆதலால் ''பொய்யான ஒரு பொருளில் ஆசையை வைக்காதே'' என்பது (மந்த்ரத்தின்) உட்கருத்து.

*மந்த்ரம் - 2*

**சங்கரரின் முன்னுரை**

இவ்வாறு மக்கள், (செல்வம், உலக இன்பங்கள்) என்ற மூவாசைகளையும் துறந்து விடுவதாலும், ஆத்மாவைப் பற்றிய அறிவில் ஊன்றி நிற்கும் காரணத்தாலும், ஆத்மா காப்பாற்றப் படவேண்டும் என்பது மேற்சொன்ன வேதவாக்கின் பொருள்.

இனி, ஆத்மாவை அறியாதவராய், அதற்கு (அப்படி அறிவதற்குச்) சக்தியற்ற மற்றவர்களின் பொருட்டு (கீழ்க் கண்டவாறு) (அடுத்துவரும்) மந்த்ரம் உபதேசிக்கிறது.

**कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेत् शतँ समाः ।**
**एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे ॥**

*குர்வந்நேவ இஹ கர்மாணி*
*ஜிஜீவிஷேத் சதம் ஸமா:।*
*ஏவம் த்வயி ந அன்யதா இதோ அஸ்தி*
*ந கர்ம லிப்யதே நரே ।।* -2-

இங்கு (இந்த உலகத்திலேயே) செய்ய வேண்டிய கடமைளைச் செய்து கொண்டு, நூறு ஆண்டுகள் வாழ்வதற்கு விரும்புவாயாக! மனிதனான உன்னிடம் காரியங்கள் (காரியங் களின் பலன்கள்) பற்றாமலிருக்க (வேண்டுமானால்) இதைத் தவிர வேறு வழியில்லை.

### சங்கரரின் உரை

வேதத்தில் கூறப்பட்ட அக்னி ஹோத்ரம் (முத்தீ ஓம்புதல்) முதலிய காரியங்களைச் செய்து முடித்துக் கொண்டே நூறு ஆண்டுகள் வாழ விரும்புவாயாக! (நூறு ஆண்டுகள் அல்லவா மனிதனுடைய முழு ஆயுட்காலம் என்று நிச்சயிக்கப் பட்டிருக்கிறது?) அவ்விதம், ஏற்கனவே (நமக்குத்) தெரிந்ததை ஒட்டியே, நூறு ஆண்டுகள் உயிர்வாழ விரும்புவாயானால், அப்பொழுது காரியங்களை (கடமைகளைச்) செய்து கொண்டேயிரு என்ற இது (கட்டளையாக) விதிக்கப்படுகிறது.

இந்த முறையில், ஒரு வெறும் மனிதன் என்று தன்னை நினைத்துக் கொண்டு (நூறு ஆண்டுகள்) உயிர்வாழ விரும்பும் உன்னிடத்தில், (உயர்ந்த நன்மையைத் தரமுடியாத) அமங்கல மான காரியம் (அதன் பலன்களும் கூட) உன்னைப் பற்றாம லிருக்க வேண்டுமானால், அக்னி ஹோத்ரம் முதலிய கடமை களைச் (செவ்வனே) செய்ய வேண்டும் என்று நாம் சொல்லும் இந்த முறையைத் தவிர வேறு வழி இல்லை; இந்த ஒரு வழி யினால்தான் காரியங்கள் (அவற்றின் பலன்கள்) உன்னைப் பற்றாது என்பது (இங்கு எடுத்துக்காட்டப்பட்ட பொருள்).

எனவே, சாஸ்திரங்களில் கட்டளையாக இடப்பட்ட அக்னி ஹோத்ரம் முதலிய காரியங்களைச் செய்து நிறை வேற்றிக் கொண்டே நீடுழி வாழ விரும்புவாயாக!

கேள்வி : முதல் (மந்த்ரத்தினால்) துறவிகளுக்கு (மெய்யறிவில் ஊன்றி நிற்பது) என்னும் ஞான-நிஷ்டை கூறப்படுகிறது (என்றும்), இரண்டாவது (மந்த்ரத்தினால்) (துறவு பூணச்)

சக்தியில்லாதவர்களுக்குக் காரியம் (கடமைகளைச்) செய்து வருவது என்ற (கர்ம-நிஷ்டை) கூறப்படுகிறது என்றும் எவ்வாறு (உம்மால்) அறியப்படுகிறது?

பதில் : சொல்கிறோம். ஞானத்திற்கும் காரியத்திற்கும் இடையே உள்ள முரண்பாடு மலைபோல அசைக்க முடியாதது என்று முன்னர் சொன்னதை ஏன் நீ நினைவில் வைக்க வில்லை? இங்கேயும் கூட, (இந்த உபநிஷத்திலும்) ''எவன் (உலகில் சாதாரண மக்களைப் போல) வாழ விரும்புகிறானோ அவன் காரியங்களைச் செய்த கொண்டு'' (என்றும்), ''இவை யெல்லாம் இறைவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறது'', ''எனவே தியாகத்தினால் (துறவினால் உன்னைக்) காப்பாற்றிக் கொள்வாயாக!'' ''எவருடைய செல்வத்தையும் விரும்பாதே'' என்றும் (துறவுநிலை பெற விரும்புகின்றவருக்குக்) கூறப்படு கிறது. ''உயிர் வாழ்வதிலோ இறப்பதிலோ விருப்பம் வைக் காதே! காட்டிற்குச் செல்!'': இதுவே வேதத்தின் முடிவான கட்டளை. ''(காட்டிற்குச் சென்றபின்) அங்கிருந்து திரும்பி வராதே!'' என்பது துறவுக்குரிய ஆணை. (மெய்யறிவு, காரியம் என்ற) இரண்டிற்கும் உள்ள பலன்களின் வேற்றுமையைப் பின்னால் (இந்த உபநிஷத்) சொல்லப் போகின்றது.

(மெய்யறிவினால் வரும் துறவு, உலக வாழ்வில் ஈடுபாட்டினால் வரும் அன்றாடக் கடமையாற்றுதல் என்ற) இந்த இரண்டு வழிகளும்தான் உலகப் படைப்பிலிருந்து தொடங்கி ஏற்பட்டிருக்கின்றன. செயல் செய்யும் வழி (கர்மம்), முதலிலும், துறவு (ஸந்யாஸ) வழி பின்னரும் வந்தன. துறவு வழியினால் மூன்று ஆசைகளின் நலிவு (உண்டாகிறது). (துறவு, இல்வாழ்வு என்ற) அவ்விரண்டனுள் துறவு வழியே மேலானது. தைத்திரீய-ஆரண்யகத்திலும் ''துறவே மேலோங்கி நின்றது'' என்று (கூறப்பட்டிருக்கின்றது). பகவானும், வேத ஆசாரியருமான வியாஸரால், தனது குமாரரான (சுகரின்)

பொருட்டு (இது குறித்து), ஆராய்ந்து உறுதியாக விளக்கப் பட்டிருக்கிறது:

''இனி, வேதங்கள் (மேற்சொன்ன) இந்த இரண்டு வழிகளிலும் நிலைப்பட்டிருக்கின்றன. (ஒன்று) காரியத்தைச் செய்கின்ற வழி; (மற்றொன்று செயல் யாவற்றையும்) துறத்தல் என்று நிச்சயிக்கப்பட்ட வழி.'' (பார்க்க : மஹாபாரதம், சாந்தி பர்வம், 241-6). இவ்விரண்டின் பிரிவினையைப் (பின்னர்) எடுத்துக் காண்பிக்கவும் போகிறோம்.

*மந்த்ரம் - 3*

**சங்கரரின் முன்னுரை**

இனி, உண்மையறியாதவனிடமுள்ள குறையைச் சுட்டிக் காட்டும் பொருட்டு இந்த (அடுத்த) மந்த்ரம் தொடங்கப் படுகிறது.

**असुर्या नाम ते लोका:**
**अन्धेन तमसाऽवृता: ।**
**ताँस्ते प्रेत्याभिगच्छन्ति**
**ये के चात्महनो जना : ॥**

*அஸுர்யா நாம தே லோகா:*
*அந்தேன தமஸாவ்ருதா: ।*
*தாக்ம்ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி*
*யே கே ச ஆத்மஹனோ ஜனா: ॥* - 3 -

அந்த அஸுரர்களின் உலகங்கள் குருட்டு இருட்டினால் மூடப்பட்டிருக்கின்றன. யார் தம் ஆத்மாவைக் கொன்று விடுகிறார்களோ, அவர்கள், இறந்தபிறகு இவைகளை (இந்த இருண்ட உலகங்களைச்) சென்று அடைகிறார்கள்.

## சங்கரின் உரை

''அஸுர்யா:'' என்றால் (அஸுரரின் உலகங்கள்). இரண்டற்ற பரம்பொருளின் நிலையை வைத்து (ஒப்பிட்டுப்) பார்க்கும் பொழுது, தேவர் முதலியவரும் கூட அஸுரர்களே ஆவர். அவர்களுடைய சொந்த உலகங்கள் ''அஸுர்யா'' எனப்படுகின்றன. ''நாம'' என்று மந்த்ரத்தில் வரும் சொல், அதற்கென்று ஒரு தனிப் பொருளில்லாத ஓர் அசை.

அந்த உலகங்கள் வினையின் பயன்களாக (வருபவை). ''லோகங்கள்'' (உலகங்கள்) என்பவை, வினைகளின் பயன்கள், அநுபவிக்கப்படுகின்ற பிறவிகள் (என்பது பொருள்). (இந்த உலகங்கள்), ''அந்தேன'' = பார்வையற்ற இருட்டான அறியா மையினால், ''ஆவ்ருதா:'' = மறைக்கப்பட்டிருக்கின்றன. எல்லா உயிர்களும் இறந்தபின் இந்த உடலைவிட்டு, அவரவர் வினையையும் சிந்தனையையும் ஒட்டித் தாவரம் ஈறாக உள்ள (இவ்வுலகங்களைச்) சென்றடைகின்றன.

(தம்) ஆத்மாவைக் கொல்லுகின்றவர்கள் என்பதால் (அத்தகைய மனிதர்கள்) ''ஆத்மஹனா:'' எனப்படுகின்றனர். அந்த மனிதர்கள் யார்? யார் (உண்மையை) அறியாதவர் களோ (அவர்கள்தான்).

அவர்கள் (தங்கள்) ஆத்மாவை எவ்வாறு எப்போதும் துன்புறுத்துகிறார்கள்? அறியாமை என்ற குற்றத்தினால், (என்றும்) உள்ள ஆத்மாவைத் (தெரிந்து கொள்ளாமல்) ஒதுக்கி விடுவதால் (ஆத்மாவைத் துன்புறுத்துகிறார்கள்), என்றுமுள்ள ஆத்மாவின் மூவாமை, இறவாமை முதலிய வற்றை உணரும் மெய்யறிவை அடையாளமாகக் கொண்ட (மெய்யுணர்வு என்ற) பலனானது, இவர்களிடத்திலே மங்கி மறைந்துபடுகிறது, கொலையுண்ட ஒருவனுக்கு (உணரும் ஆற்றல் போய்விடுவது போல).

இந்தக் காரணத்தால், அறிவில்லாப் பாமரர்கள், ''ஆத்மாவைக் கொன்ற மக்கள்'' என்று கூறப்படுகின்றார்கள்.

எனவே, அவர்கள் ஆத்மாவைக் ''கொன்ற'' குற்றத்தின் காரணமாக பிறப்பு இறப்பை மாறி மாறி அடைகிறார்கள்.

*மந்த்ரம் - 4*

**சங்கரரின் முன்னுரை**

உண்மையை அறியாதவர்கள் ஆத்மாவைக் ''கொல்வ தனால்'' பிறப்பையும் இறப்பையும் மாறி மாறி அடைகிறார்கள். இதற்கு மாறாக, மெய்யறிவு பெற்று (தத்தம்) ஆத்மாவைக் ''கொன்றுவிடாத'' மனிதர்கள் வீடுபேறு (மோக்ஷம்) அடை கிறார்கள். அந்த ஆத்ம மெய்ப்பொருள் (என்பது) எத்தன்மையது? (இதற்கு விடை) (அடுத்த பாடலில்) சொல்லப்படுகிறது.

अनेजदेकं मनसो जवीयो
नैनद्देवा आप्नुवन् पूर्वमर्षत् ।
तद्धावतोऽन्यानत्येति तिष्ठत्
तस्मिन्नपो मातरिश्वा दधाति ॥

*அநேஜத் ஏகம் மனஸோ ஜவீயோ*
*நைநத்தேவா ஆப்நுவந் பூர்வமர்ஷத் ।*
*தத்தாவதோ அன்யான் அத்யேதி திஷ்ட்டத்*
*தஸ்மின்னபோ மாதரிச்வா ததாதி ॥* *- 4 -*

அது (அந்த ஆத்மா) அசையாதது. (இரண்டற்ற) ஒன்று. மனத்தைவிட மிகுந்த விசையுடையது. புலன்கள் அதை முந்த முடியாது. ஏனெனில், (அது) (எல்லாவற்றையும்) முந்திக் கொண்டு (முன்) நிற்கிறது. தான் நின்று கொண்டிருந்தாலும் ஓடுவது போன்ற அது மற்றவற்றைக் கடக்கிறது. அதில் நின்று மாதரிச்வா என்ற (காற்றுச் சக்தி) எல்லாக் காரியங்களையும் (முறையாக) வகுத்து நடத்துகிறது.

## சங்கரரின் உரை

''அநேஜத்'' = நகராதது. 'ஏஜ்ரு கம்பனே' (என்பது பாணிநி முனிவர் வகுத்த சொல் இலக்கணம்). 'ஏஜ்ரு' என்ற தாதுவிற்கு ''அசைதல்'' என்பது பொருள். ''கம்பனம்'' என்றால் ''அசைதல்''; தன்னுடைய நிலையிலிருந்து நழுவுதல். (அந்த அசைவு) இல்லாதது (ஆத்மா); எப்பொழுதும் (மாறாத) ஒரே (சீரான) தன்மையுடையது என்பது கருத்து. அது (பலவாறு வேறுபட்ட) எல்லாப் பொருட்களிலும் (தான் வேறுபடாமல் நிற்கிறது). (செயல் செய்ய) முனைவது முதலியவற்றைத் தனது இயல்பாக உடைய மனத்தைவிட அது (ஜவீய:) விரைவானது.

கேள்வி : நிலைத்தது, அசையாதது என்ற (இயல் புடைய) இந்த (ஆத்மா, அதே சமயம்) மனத்தைவிட வேகமாகச் (செல்லக்கூடியது) என்று எப்படி ஒன்றுக் கொன்று முரண்பாடாகக் கூறப்படுகிறது?

பதில் : இது பிழையன்று. தடையுள்ளது, தடையில்லாதது என்பதைப் பொறுத்து (அப்படிக் கூறுவது) பொருத்தமானதே. வேறொரு தடையின் கலப்பற்ற தன் சொந்த இயற்கையில் (அந்த ஆத்மா இரண்டற்ற) ஒன்று என்றும் அசைவற்றது என்றும் கூறப்படுகின்றது. (அறிவின்) ஓர் உட் கருவியானதும், ஏதேனும் ஒரு பொருளை 'இதுவோ அதுவோ' என்று ஆலோசிக்கும் இயல்பையுடையதுமான மனத்திற்குத் தடையை (குறையை) ஒட்டி ஒரு கட்டுக்குள் இயங்க (வேண்டிய) நிலை இருப்பதால், இங்கு நம் உடம்பினுள் இருக்கும் அதற்கு பிரம்ம லோகம் வரையுள்ள தொலை தூரம் செல்லுதல் (என்ற செயல்) நினைத்த மாத்திரத்தில் ஒரு கண நேரத்திற்குள் நடக்கிறது. இந்தக் காரணத்தால் (இந்த) மனத்தினுடைய வேகம் உலகில் (எல்லோருக்கும்) கண்கூடு. மனது பிரம்ம லோகம் முதலியவற்றிற்கு இவ்வாறு விரைவில் செல்லுகிறது என்றாலும், (மனத்தினுள்ளே விளங்குகின்ற) ஆத்மா என்ற

அறிவின் தோற்றம், (அந்த மனத்திற்கும்) முன்னமே (அந்த உலகங்களை) அடைந்து விட்டதாக உணரப்படுகிறது. அதனால் மனத்தை விடவும் (ஆத்மா) விரைவானது என்று (உபநிஷத்) கூறியது.

''நைநத்தேவா'' = பொருட்களை விளக்கித் தெரியச் செய்வதனால் கண் முதலிய புலன்களே ''தேவர்கள்'' எனப்படு கின்றன. இங்கு சொல்லப்பட்ட ஆத்மா என்ற மெய்ப்பொரு ளை (இவை) அடையவில்லை (அறியவில்லை). இவற்றைவிட மனது அதிக வேகமுடையது. (புலன்களுக்கும் ஆத்மாவிற்கும்) இடையே மனத்தின் தொழில் இருந்து கொண்டு (அவற்றைப்) பிரிப்பதால் ஆத்மா என்ற மெய்ப்பொருளின் ஒரு சாயல் கூட இந்தப் புலன்களுக்குக் காட்சியாவதில்லை.

விரைந்து செல்லும் மனத்திற்கும் முன்னதாக ஆத்மா சென்று விடுகிறது. ஆகாயம்போல அது எங்கும் இருக்கிறது அல்லவா? ஆத்மா என்ற, எங்கும் நிறைந்த அந்த மெய்ப் பொருள், பிறப்பு இறப்பு என்ற எல்லாத் தன்மைகளும் நீங்கிய தாய், தடை (குறை) ஒன்றும் இல்லாத தன்னுடைய சொந்த இயல்பினால் மாறுதலில்லாமலே இருந்து கொண்டு, தடை (குறை)களினால் உண்டு பண்ணப்பட்ட உலக வாழ்வின் எல்லாப் பொருட்களையும் அனுபவிக்கிறது. இந்தக் காரணத் தினால் பகுத்தறிவில்லாத பாமரர்களுக்கு ஒவ்வொரு உடம் பிலும் (அது) தனித்தனியே (பிரிந்து) இருப்பதுபோல் தோற்ற மளிக்கிறது. இதை உபநிஷத் (நமக்குத்) தெரியப்படுத்திய்து.

வேகமாகச் செல்லுகின்ற ஆத்மாவிலிருந்து வேறான மனது, வாக்கு, புலன்கள் முதலியவற்றை அது (அந்த ஆத்மா) கடந்து செல்கிறது. (அதாவது) கடந்து செல்வது ''போல்'' தோன்றுகிறது. ''போல்'' என்ற கருத்தை, ''திஷ்டத்'' = (தான் ஒரு மாறுதலுமில்லாமலே நிற்கிறது) என்ற தனது சொல்லினா லேயே உபநிஷத் தெரிவிக்கிறது என்பது குறிப்பு.

''மாதரிச்வா'' = அந்தரிக்ஷத்தில் (மண்ணுக்கும் விண்ணிற் கும் இடைப்பட்ட பரப்பில்) இயங்குவதால், ''மாதரிச்வா'' எனப் பெயர் பெற்ற காற்று, எல்லா உயிர்களையும் தாங்கு கின்றது. (அங்குமிங்கும் வீசிச்) செயற்படுகின்றது. செயலும் செயற்கருவிகளும் எல்லாம் எதைச் சார்ந்து இருக்கின்றனவோ, எந்தக் (காற்றில் இவையெல்லாம்) ஊடும் பாவுமாகக் கோக்கப்பட்டிருக்கின்றனவோ, எது ''ஸூத்ரம்'' (கோக்கும் நூல்) என்று பெயர் பெற்றதோ, எல்லா உலகங்களையும் (எது) இணைத்து நிற்கிறதோ, அந்த ''மாத்ரிச்வா'' (என்ற காற்றுச் சக்தி), தீ, சூரியன், மழை இவற்றின் சுடர்விடும் தன்மை, சுடுந் தன்மை, நீர் பொழியும் தன்மை, ஒளிவீசும் தன்மை என்பன வற்றையும், (உயிர்களின்) செயல்கள் தொழில்கள் முதலிய வற்றையும் வகுத்து (முறைப்படுத்தி) 'ததாதி' = அளிக்கிறது.

அல்லது (''ததாதி'' என்ற மந்த்ரத்திலுள்ள சொல்லிற்கு) 'தாங்குகின்றது' (என்றும் பொருள் கொள்ளலாம்). ''இதனிடத்தே (பரம்பொருளிடத்தே உள்ள) அச்சத்தினால் காற்று வீசுகிறது''. (தைத்திரீய-உபநிஷத் II-8.1) என்பது முதலிய வேத வாக்குகள் (இவ்வாறு) கூறுகின்றன. செயல்களும் அவற்றிற்குரிய கருவிகள் முதலிய எல்லா மாறுதல்களும், அனைத்திற்கும் அடிப்படைக் காரணமாகவும், என்றுமுள்ளதும், அறிவே வடிவானதுமான (மெய்ப்பொருள்) இருப்பதால்தான் நடை பெறுகின்றன, (நடை பெறமுடியும்) என்பது கருத்து.

### *மந்த்ரம் - 5*

### சங்கரரின் முன்னுரை

(வேத) மந்த்ரங்கள் (ஒரு கருத்தை வற்புறுத்தி விளங்க வைப்பதில்) சலிப்படைவதில்லை என்பதால், முன் மந்த்ரத்தில் சொன்ன கருத்தையே மறுபடியும் (இந்த 5 வது மந்த்ரத்தில்) (உபநிஷத்) சொல்கிறது.

तदेजति तन्नैजति तद्दूरे तद्वन्तिके ।
तदन्तरस्य सर्वस्य तदु सर्वस्यास्य बाह्यतः ॥

*ததேஜதி தந்நைஜதி*
*தத்தூரே தத்வந்திகே ।*
*ததந்தரஸ்ய ஸர்வஸ்ய*
*தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத: ॥* -5-

அது அசைகிறது; அது அசைவதில்லை. அது தூரத்தில் இருக்கிறது; அது வெகு அருகில் (இருக்கிறது). அது எல்லா வற்றிற்கும் உள்ளே (இருக்கிறது); அது எல்லாவற்றிற்கும் வெளியே (இருக்கிறது).

**சங்கரரின் உரை**

(உபநிஷத்தில்) இந்த இடத்தில் பேசப்படுகின்ற மெய்ப்பொருள், அசைகிறது; (ஆனால்) (அதே சமயம்) அசைவதுமில்லை. அதாவது, தான் அசைவதேயில்லை; தான் அசையாததாகவே இருந்து கொண்டு, அசைவதுபோல் (தோன்றுகிறது) என்பது கருத்து. மேலும், அது தொலைவில் (உள்ளது); நூறு கோடி ஆண்டுகளானாலும் மெய்யறிவு பெறாதவர்களால் அடைய முடியாததாக அது இருப்பதால் வெகு தொலைவில் இருப்பதுபோல் தோன்றுகிறது.

''தத் உ அந்திகே'': (உபநிஷத்தில் வரும் சொல்லான 'தத்வந்திகே' என்பதை 'தத்-உ-அந்திகே' என்று பிரித்துக் கொள்ள வேண்டும்). மெய்யறிவு பெற்றவர்களுக்கு (மெய்ப் பொருள்) வெகு அருகில் இருக்கிறது. அவர்களது ஆத்மா வாகவே (சொந்தத் தன்மையாக) அது இருப்பதே இதற்குக் காரணம். (இவ்வாறு கூறாமல்), வெகு தொலைவிலேயோ அருகிலேயோ அது இருப்பதாக (ஊர் முதலிய இடங்களைக் குறித்துச் சொல்வதுபோல் சாதாரணமாகப் பொருள் கொள்ளக் கூடாது).

''தத் அந்தரே''-எல்லாவற்றிற்கும் உள்ளே அது இருக்கிறது. ''எந்த ஆத்மா அனைத்திற்கும் உள்ளே (இருக்கிறதோ'' என்ற ப்ருஹதாரண்யக உபநிஷத் III-4.1) வாக்கு இதற்குச் சான்று.

அதே நேரத்தில், பெயர், உருவம், செயல் இவற்றை இயல்பாக உடைய இந்த அனைத்து உலகிற்கு வெளியேயும் அது (இருக்கிறது). ஆகாயம் போல எங்கும் இருப்பதாலும், வெகு நுட்பமாக இருப்பதாலும், அது அனைத்திற்கும் உள்ளே விளங்குகிறது. ''அறிவே வடிவானது'' என்று (ப்ருஹ தாரண்யக உபநிஷத், IV-5.13) அறிவிப்பதே (இதற்கு சான்று). இதனால் அது நிரந்தரமானதும் கூட.

*மந்த்ரம் - 6*

**यस्तु सर्वाणि भूतानि आत्मन्येवानुपश्यति ।**
**सर्वभूतेषु चात्मानं ततो न विजुगुप्सते ॥**

*யஸ்து ஸர்வாணி பூதானி*
*ஆத்மன்யேவானுபச்யதி ।*
*ஸர்வ பூதேஷு சாத்மானம்*
*ததோ ந விஜுகுப்ஸதே ॥* -6-

எவன் தன்னிடத்திலேயே எல்லாவற்றையும் தொடர்ந்து காண்கின்றானோ, எல்லாவற்றிலும் தன்னைக் (காண்கின்றானோ) அவன் அவற்றிலிருந்து வெறுப்பை அடைவ தில்லை.

**சங்கரரின் உரை**

விடுதலையை (மோக்ஷத்தை) விரும்புகின்ற துறவி, மூலப்ரக்ருதி (மூலப் பௌதிகப் பொருள்) முதல் மரங்கள் முடிய, (மூலப் பௌதிகப் பொருளின் பரிணாமமான) எல்லாப் பொருட்களையும் ஆத்மாவிலேயே (இருப்பதாகப்) பார்க்கிறான், ஆத்மாவைத் தவிரத் தனியாக இருப்பதாக (வேறுபடுத்திப்)

பார்க்கவில்லை என்பது கருத்து); (அதே போல்) அந்த (பௌதிகப்) பொருட்களின் சொந்த ஆத்மாவைத் தன் ஆத்மா வாகப் (பார்க்கிறான்), (இன்னும் விளக்கமாகச் சொல்வ தானால்), எவ்வாறு ''செயல், செயற்கருவிகள் இவற்றின் கூட்டமைப்பான இந்த உடம்பிற்கு நான் ஆத்மா; எல்லா அறிவிற்கும் சாக்ஷியாக இருப்பவன், இரண்டற்ற ஒருவன், குணம் குறிகளற்றவன்'' என்று இவண் (உணர்கிறானோ), அத்தகைய அந்தத் தன்மையினாலேயே, ''மூலப்ரக்ருதி (இயற்கை) முதல் தாவரங்கள் முடிய எல்லாப் பொருட் களிலும் நானே உட்தத்துவம்'' என்று ஆத்மாவை (அதாவது தன்னை) வேற்றுமைகளற்றவனாகப் பார்க்கிறானோ, (அத்தகைய) அவன் அந்த மெய்க்காட்சியின் பயனாக ஒரு பொழுதும் எதனிடத்தும் வெறுப்பை அடைவதில்லை; பகைமை பாராட்டுவ தில்லை. (மேற்சொன்ன) யாவும் ஏற்கனவே இருக்கின்ற ஓர் உண்மையையே திருப்பிச் சொல்வதுதான். (தன்னைவிட) வேறாக வும், (தனக்குக்) கெடுதல் செய்வதாகவும் பார்க்கும் பொழு தல்லவா வெறுப்பும் (பகையும்) ஏற்படுகிறன? (தனது) ஆத்மா என்ற (மெய்ப்பொருளையே) மிகவும் தூயதாக எப்பொழுதும் பார்க்கின்றவனுக்கு, வெறுப்புக்குக் காரணமான இரண்டாவது பொருள் இல்லை. இது ஏற்கனவே இருக்கின்ற உண்மைதான். ''ஆகவே (யாரையும் எதையும்) (மெய்யுணர்வு பெற்றவன்) வெறுப்பதில்லை'' என்கிறது (இந்த) உபநிஷத்.

*மந்த்ரம் - 7*

### சங்கரரின் முன்னுரை

(மேற் சொன்ன) இந்தக் கருத்தையே அடுத்த மந்த்ரமும் சொல்கிறது.

**यस्मिन् सर्वाणि भूतानि आत्मैवाभूत् विजानतः ।**
**तत्र को मोहः कः शोकः एकत्वं अनुपश्यतः ॥**

*யஸ்மின் ஸர்வாணி பூதானி*
*ஆத்மைவாபூத் விஜானத: ।*
*தத்ர கோ மோஹ: க: சோக:*
*ஏகத்வம் அனுபச்யத: ॥* - 7-

மெய்யுணர்ந்த ஒருவனுக்கு எப்பொழுது எல்லாப் பொருட்களும் தன்மயமாக ஆகிவிட்டதோ அங்கு (அவ்வாறு) ஒருமையைத் தொடர்ந்து பார்க்கும் (அவனிடத்தில்) அறிவு மயக்கம் ஏது? துயரம்தான் ஏது?

**(சங்கரரின் உரை)**

எப்பொழுது அத்தனைப் பொருட்களுமே, மெய்யுணர்வின் காரணமாக (ஒருவனுடைய) ஆத்மாவாகவே ஆயிற்றோ, மெய்ப் பொருளான ஆத்மாவே எங்கும் இருப்பதாயிற்றோ, அங்கு அப்பொழுது, அறிவுமயக்கம் ஏது? துயரம் ஏது?

உண்மையறியாதவர்களுக்குத்தான் மோகமும், சோகமும் ஆசைக்கும் செயலுக்கும் வித்தாகின்றன, (காரணமாகின்றன). ஆகாயத்திற்கு ஒப்பாகத் தூயதான ஆத்மாவின் ஒருமையைக் காண்கின்றவனுக்கு (அவ்வாறு) இல்லை.

''மோகம் ஏது? துயரம் ஏது?'' என்று, உண்மையைத் தெரிந்து கொள்ளாததனால் விளையும் மோகத்தையும் துயரத்தையும், (உண்மையறிந்தவனுக்கு அவை இல்லை) என்று மறுத்துக் கூறுவதன் மூலம், அவை (அவனிடத்தில்) தோன்றுவதற்கே முடியாது என்று உபநிஷத் காட்டியிருக்கிறது. (உண்மையைத் தெரிந்து கொள்ளாத) ஒரு காரணத்தினால் உண்டாகியிருக்கின்ற உலகவாழ்க்கையின் முழு அழிவும் இதனால் எடுத்துக்காட்டப்பட்டதாயிற்று.

*மந்த்ரம் - 8*

**சங்கரரின் முன்னுரை**

சென்ற மந்த்ரங்களினால் கூறப்பட்ட ஆத்மா (மெய்ப் பொருள்) தன்னுடைய சொந்த வடிவத்தில் என்ன தன்மை

யுடையது என்பதற்குப் பின்வரும் மந்த்ரம் (பதில்) சொல்லுகிறது:-

**स पर्यगात् शुक्रं अकायं अव्रणं**
**अस्नाविरं शुद्धं अपापविद्धम् ।**
**कविर्मनीषी परिभूः स्वयंभूः**
**याथातथ्यतोऽअर्थान् व्यदधात् शाश्वतीभ्यः समाभ्यः ॥**

*ஸ பர்யகாத் சுக்ரம் அகாயம் அவ்ரணம்*
*அஸ்நாவிரம் சுத்தம் அபாபவித்தம் ।*
*கவிர் மநீஷீ பரிபூ: ஸ்வயம்பூ:*
*யாதாதத்யதோ அர்த்தான் வ்யததாத்*
*சாச்வதீப்ய: ஸமாப்ய: ॥* - 8 -

அவர் (அந்த மெய்ப்பொருள்) எங்கும் நிறைந்தவர்; உருவமில்லாதவர்; காயமில்லாதவர்; நரம்பில்லாதவர்; மாசற்றவர்; பாவங்கள் நீங்கியவர்; எல்லாவற்றையும் (தனித் தனியே) அறியக் கூடியவர்; மனத்தை ஆள்பவர் (அல்லது, எல்லாவற்றையும் மொத்தமாக அறியக் கூடியவர்); எல்லாவற்றிற்கும் மேலானவர்; தானே (பிறிதொன்றைச் சாராமல்) தோன்றியவர். அவர் (அந்த ஆத்மா), நித்யமான ஆண்டுகளுக்கு (அதாவது, பிரம்மாக்களுக்கு) (அவரவர்) கடமைகளைப் பகிர்ந்தளிக்கிறார்.

**சங்கரரின் உரை**

முன் சொல்லப்பட்ட அந்த ஆத்மா எத்திசையிலும் செல்பவர். ஆகாயம் போல் (எங்கும்) பரந்தவர் என்பது கருத்து. தூய்மையானவர், ஒளிமயமானவர், பிரகாசிப்பவர். சரீரமில்லாதவர். நுண் உடல் (ஸூக்ஷ்ம சரீரம்) அற்றவர். காயம் படாதவர் (எதனாலும் குறைவுபடாதவர்). நரம்புகள் இல்லாதவர். 'தழும்பில்லாதவர்', 'நரம்புகள் இல்லாதவர்' என்று சொன்னதால், ஸ்தூல (பரு) உடம்பு (அவருக்குக்

கிடையாது) என்று மறுக்கப்பட்டது. தூயவர், மாசற்றவர், அறியாமை என்ற மாசுகள் நீங்கியவர் என்றதால் (அவருக்குக்) காரண சரீரமும் (அதாவது பிறப்பிற்கு வித்தான அறியாமையும்) மறுக்கப்பட்டது. தருமம், அதருமம் முதலிய பாவங்களும் (அவரிடத்தில்) இல்லை.

'சுக்ரம்' என்பது முதலிய (மந்த்ரத்திலுள்ள) வாக்குகள் ஆண்பாலைக் குறித்தவையாய் மாற்றிக் கொள்ள வேண்டும். ஏனெனில் ''அவர் எங்கும் இருக்கிறார்'' என்று தொடங்கி ''அவர் தொலை நோக்குடையவர்; முற்றும் உணர்ந்தவர்'' என்பது முதலிய ஆண்பாலைக் குறிக்கும் (சொற்களால்), முடித்திருப்பதுதான்.

அவர் தொலைநோக்குடையவர்; எல்லாவற்றையும் பார்க்கிறவர். ''இதைவிட (ஆத்மாவைவிட) வேறான, 'பார்க்கின்றவன்' என்ற ஒருவனும் கிடையாது''. (பிருஹ தாரண்யக - உபநிஷத் : III-8.11) என்பது முதலிய வேதவாக்குகள் இருப்பது (இதற்குச் சான்றாகும்).

(இவர்) மனத்தை ஆள்பவர். எல்லாம் அறிந்த இறைவன் என்பது பொருள். எல்லாவற்றிற்கும் மேலே இருப்பவர்; தானே (தனக்கு வேறு ஒரு காரணமின்றி) உண்டானவர். இவ்வாறு (எல்லாவற்றிற்கும்) யார் உயர்ந்தவராக இருக்கிறாரோ, (அவர்) எல்லாம் தானேயாய் இருக்கிறார் என்பதால், 'ஸ்வயம்பூ' (எனப்படுகிறார். அதாவது தனக்கு வேறு ஒரு காரணமில்லாதவர்.)

எப்பொழுதும் தன்னிச்சையாக நிற்கும் (விளங்கும்) அந்த இறைவன், எல்லாம் அறிந்தவராக இருப்பதால், வினைப்பயன், முயற்சி, கருவி என்ற இவற்றிற்கு ஏற்ப, ''ஆண்டுகள்'' என்று பெயருள்ள பிரம்மாக்களுக்கு, (அவர்கள்) செய்து முடிக்கவேண்டிய கடமைகளை முறைப்படி சரியாக வகுத்துக் கொடுக்கிறார் என்பது கருத்து.

*மந்த்ரம் - 9*

## சங்கரரின் முன்னுரை

'ஈசாவாஸ்யம் இதம் ஸர்வம் .... மா க்ருத: கஸ்ய ஸ்வித்தனம்' என்ற முதல் மந்த்ரத்தினால் வேதத்தின் முதன்மை யான கருத்தாக, ஆசைகளெல்லாவற்றையும் துறந்ததால் வரும் ஞான-நிஷ்டை (மெய்யுணர்வு நிலை) கூறப்பட்டது. மெய் யறிவு பெறாமல் (நூறாண்டு) வாழ விரும்புகின்றவர்களுக்கு, ஞான-நிஷ்டை கைகூடாது என்பதனால், ''குர்வந்நேவ இஹ கர்மாணி ... ஜிஜீவிஷேத்'' (''காரியங்களைச் செய்து கொண்டே இந்த உலகில் நூறாண்டு வாழ விரும்பு'') என்ற இரண்டாவது மந்த்ரத்தில் கர்ம-நிஷ்டை (உலகில் வாழ்ந்து செயல் செய்யும் நிலை) கூறப்பட்டது.

இந்த (மேற் சொன்ன) இரண்டு மந்த்ரங்களினால் எடுத்துக் காட்டப்பட்ட இவ்விரண்டு நிலைகளும் (அவற்றின்) வேற்றுமை களும் ப்ருஹதாரண்யக-உபநிஷத்திலும் (விளக்கமாக) காண் பிக்கப்பட்டிருக்கின்றன. ''எனக்கு ஒரு மனைவி ஏற்படட்டும் என்று அவர் (பிரஜாபதி) விரும்பினார்'' (I-4.17) என்பது முதலிய (வாக்குகளால்), ''ஆசை வசப்பட்ட (மெய்யறிவு பெறா தவனுக்குச்) செயல்கள் (ஏற்பட்டிருக்கின்றன)'' என்று அந்தப் (ப்ருஹ தாரண்யக-உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது.)

(மேலும்) ''மனதே இவருக்கு ஆத்மா; வாக்கே மனைவி'' (ப்ருஹதாரண்யக-உபநிஷத் I-4.17) முதலிய வாக்குகளால், அறியாமையும் ஆசையுடைமையும், செயலில் (நன்றாக) ஊன்றிவிட்டவனுக்கு (இருப்பது) உறுதியாகத் தெரிகிறது.

அவ்விதமே, அவனுடைய செயலின் பலனாக, ஏழு வகை உணவுகளின் படைப்பும், இவையெல்லாம்தான் தானும் தன் வாழ்வும் என்ற எண்ணமும். அவற்றோடு வேற்றுமை யின்றி ஒன்றி விடுதலும் ஏற்பட்டுவிட்டன. (ப்ருஹதாரண்யக-உபநிஷத் I-5.13)

(ஏழு வகை உணவுகளாவன :

1. மனிதர் எல்லோரும் தினமும் உண்ணும் உணவு, (2-3.) தேவர்களுக்கு அவியாக ஹோமம் செய்யப்படும் உணவுகள் இரண்டு, (அமாவாசை, பௌர்ணமி நாட்களில் செய்யப்படும் சடங்குகள். இவை தேவர்களுக்கு உணவு.) அடுத்த மூன்று உணவுகள் மனம், வாக்கு, உயிர்மூச்சு என்பன. இவை உயிருக்கு உணவு. ஏழாவது பசுவின் பால், இது பிராணிகளுக்கு உணவு.)

மனைவி முதலிய மூவாசைகளின் துறவால், செயல் நிலைக்கு எதிரான ஆத்மா (என்ற தன் சொந்த இயற்கைத் தன்மையிலேயே), நிலை நிற்றல் என்பது ''ஆத்மா என்ற இந்த உலகம் எங்களுக்கு இருக்க, (மனைவி) மக்களால் நாங்கள் என்ன செய்யப் போகிறோம்?'' என்பது முதலிய (ப்ருஹ தாரண்யக-உபநிஷத் (IV-4.22) வாக்குகளினால், மெய்யறிவு பெற்றவர்களின் நிலையாகக் காண்பிக்கப்பட்டது. மெய்யறிவு நிலை கைவரப்பெற்ற துறவிகளின் பொருட்டு, ''அஸுர்யா என்ற அந்த உலகங்கள்'' என்பது முதலான (மந்த்ரங்களினால்) மெய்யறிவு பெறாதவர்களை ஏளனம் செய்யும் வாயிலாக, மெய்ப்பொருளின் இயல்பு, ''அவர் எங்கும் நிறைந்தவர்'' என்ற இது முடிய உள்ள (ஈசாவாஸ்ய) மந்த்ரங்களினால் உபதேசிக்கப்பட்டது. அவர்கள் அல்லவா இங்கு (உபதேசம் பெறத்) தகுதி பெற்றவர்கள்? (இதற்கு மாறாக) ஆசைக்கு ஆட்பட்டவர்கள் (இந்தத் தகுதி பெற்றவர்) அல்ல என்பது (தெளிவாயிற்று).

இவ்வாறே, சுவேதாச்வதரர்களின் மந்த்ரோபநிஷத்திலும், ''எல்லா ஆச்ரமங்களுக்கும் அப்பாற்பட்டவர்களுக்கு (அதாவது, முற்றும் துறந்தவர்களுக்கு), எல்லா முனிவர் கூட்டத்தினாலும் முழுதும் புகழப்படுகின்ற இந்த மிக உயர்ந்த (உபதேசத்தைச் சொன்னார்,'' (ச்வேதாச்வதர-உபநிஷத் VI-21) என்பது முதலியவை பிரித்துக் கூறப்பட்டன.

கேள்வி : (இந்த மந்த்ரம் கூறுவது) யாவும் ஆசைகளுக்கு ஆட்பட்டவர்களுக்குத்தான்; காரியம் செய்பவர்களுக்குத்தான்; எல்லோருக்கும் பொதுவாகச் சொல்லப்பட்டது இல்லை என்பது எப்படித் தெரிகிறது?

விடை: ''ஆசை அற்றவர்களுக்கு, எல்லாப் பொருட் களும் (தன்) ஆத்மாவாக (தானாக) இருப்பதை உணர்ந்தவர் களுக்கு, (இரண்டற்ற) ஒருமையைக் கண்டவருக்கு, மயக்க மேது, துயரமேது?'' என்று (ஈசாவாஸ்ய மந்த்ரம்) கூறுகிறது. மெய்ப் பொருள் ஒன்றே என்ற மெய்யுணர்வு (பிறந்த அந்நிலையில்), செய்ய வேண்டிய காரியம், செய்ம்முறை என்ற வேற்றுமை யெல்லாம் அற்றுப் போய்விட்டதன் மூலம் (இது எடுத்துக் கூறப்பட்டது). ஏதோ ஒரு (உடலால் செய்யும்) செயலுடனோ, மனத்தால் செய்யும் செயலான உபாஸனை (அல்லது) இறை வனைத் தொடர்ந்து சிந்தித்தல் என்ற அறிவுடனோ, மெய்யறி வுள்ளவன் (மெய்யறிவைச்) சேர்ப்ப தில்லை. இந்த இடத்திலோ, அப்படி சேர்க்கும் நோக்கம் கொண்ட அறியாத வனைக் குறித்து (அவனது தவற்றைச் சுட்டிக் காட்டும் பொருட்டு) நிந்தனையாக எடுத்துக் கூறப் படுகின்றது.

(தன் சொந்த) அறிவினாலோ, அல்லது மெய்ந்நூல் களின் அடிப்படையிலோ (உபாஸனையும், செயலும்) எவருக்கு சாத்தியம் என்று தோன்றுகிறதோ அவர்களைப்பற்றி இங்கு கூறப்படுகிறது.

தேவதைகளைக் குறித்துச் செய்யப்படும் (உபாஸனை என்ற சிந்தனையினால்) தெய்வீகமான செல்வம் பெறப்படு கிறது. (அந்தச் சிந்தனையே இங்கு) 'அறிவு' என்று அழைக்கப் படுகிறது. இந்த அறிவே உலகியல் காரியங்களோடு இணைய முடியும். இது பரம்பொருளைப் பற்றிய மெய்யறிவு அன்று. (பரம்பொருளைப் பற்றிய மெய்யறிவு காரியத்தோடோ, உபாஸனையோடோ சேருவதற்கு இடமேயில்லை).

'உபாஸனை என்ற வித்யையால் தேவர்களின் உலகம் பெறப்படுகிறது' என்று, வித்யை என்று அழைக்கப்படும் உபாஸனையின் பலன் தனியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (காரியங்களின் பலன்வேறு; உபாஸனையின் பலன் வேறு; மெய் யறிவின் பலன் இவ்விரண்டினும் வேறானது. ''வித்யை'' என்ற சொல், இங்கு மெய்யறிவைக் குறிக்கவில்லை. உபாஸனை யைத்தான் குறிக்கிறது). உபாஸனையையும் காரியங்களையும் சேர்த்துச் செய்வது என்பது இங்கு பழிக்கப்படவில்லை. இவை யிரண்டிற்கும் தனித்தனியேயும் வெவ்வேறு பலன்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. ஆனாலும், இவையிரண்டையும் ஒருவரே செய்யலாம். அதில் தவறு ஒன்றுமில்லை. வேதத்திலும் ''உபாஸனை யினால் அதைச் சென்று அடைகிறார்கள்''; ''உபாஸனையினால் தேவர்களின் உலகம் (கிடைக்கும்);'' ''அங்கு தெற்குத் திக்கில் போகிறவர்கள் செல்வதில்லை;'' ''காரியங்களினால் மூதாதை யரின் உலகம் (கிடைக்கும்).'' என்று இவ்விரண்டின் பலன் களும் தனித்தனியே கூறப்பட்டிருக்கின்றன. வேதத்தில் சொல்லப்பட்ட கட்டளை ஒன்றும் செய்யாமல் விடக்கூடாது.

*மந்த்ரம் - 9*

**अन्धं तमः प्रविशन्ति**
**ये अविद्यां उपासते ।**
**ततो भूय इव ते**
**तमो य उ विद्यायाँ रताः ॥**

*அந்தம் தம: ப்ரவிசந்தி யே அவித்யாம் உபாஸதே ।*
*ததோ பூய இவ தே தமோ ய வித்யாயாக்ம் ரதா: ॥ -9-*

யார் அவித்யையை உபாஸிக்கிறார்களோ அவர்கள் குருட்டு இருளில் பிரவேசிக்கிறார்கள். வெறும் வித்யையி லேயே (உபாஸனையிலேயே) யார் ஈடுபடுகிறார்களோ, அவர் கள் இன்னும் அதிகமான (இருட்டில் பிரவேசிக்கிறார்கள்)

## சங்கரரின் உரை

குருட்டு இருட்டை அடைகிறார்கள். யார்? அறிவிற்கு எதிரான அறியாமை (காரணமாக விளைந்த) செயல்களைச் (செய்வதிலேயே முனைப்பாக யார் இருக்கிறார்களோ அவர்கள்) என்பது கருத்து. செயல்கள் மெய்யறிவிற்கு எதிரியாக இருப்பதால் (இவ்வாறு சொல்லப்பட்டது). அக்னி ஹோத்ரம் (முத்தீ வளர்த்தல்) முதலிய (செயல்களை) அடையாளமாகக் கொண்ட அந்த அறியாமையை (அவித்யையை) யார் வழிபடுகிறார்களோ, (காரியம் செய்வதிலேயே ஊக்கமாக இருக்கிறார்களோ), அதிலேயே ஆழ்ந்து கிடக்கிறார்களோ, அதன் வழி நிற்கின்றார்களோ (அவர்கள் குருட்டு இருள் சூழ்ந்த இடத்தை அடைகிறார்கள்) என்பது கருத்து.

இந்தக் குருட்டு இருட்டை விடவும் அதிகமான இருட்டைச் சிலர் அடைகிறார்கள். யார் (அவர்கள்)? (செய்ய வேண்டிய) காரியத்தைச் (செய்யாமல்) விட்டுவிட்டு, தேவதைகளை உபாஸிப்பது என்ற உபாஸனையை மட்டுமே செய்வதில் ஈடுபட்டவர்கள்.

*மந்த்ரம் - 10*

## சங்கரரின் முன்னுரை

இந்த இடத்தில், உபாஸனை, காரியம் என்ற இரண்டையுமே சேர்த்துப் பழகுவதற்குக் காரணமான, (அவற்றின்) இடையே உள்ள பலன்களின் வேறுபாட்டைக் கூறியது (அடுத்து வரும் மந்த்ரம்). இவ்விதம் (வேறுபட்ட) பலனுள்ளவை என்பதைச் சொல்லாவிட்டால் ஒன்று பலனுள்ளது, மற்றது பலனற்றது என்று ஆகி ''ஒன்று முக்கியமானது; மற்றொன்று (அதில் அடங்கிய) அதன் உறுப்பாகும்'' என்ற உறவுதான் ஏற்படும். அவ்வாறாயின், ஒன்றுக்குள் மற்றொன்று அடங்கி விடும். [(ஆனால்) உபாஸனை காரியத்தின் உறுப்புமல்ல;

காரியம் உபாஸனையின் உறுப்புமல்ல. அவை தனித் தனியான, அவைகளுக்கே உரிய பலனுள்ளவை என வேதங்கள் சொல்லியிருக்கின்றன. ஆயினும் இரண்டையும் சேர்த்தே பயிலுவது இன்னும் உயர்ந்த பலனைத்தரும்.]

**अन्यदेव आहुः विद्यया**
**अन्यत् आहुः अविद्यया ।**
**इति शुश्रुम धीराणां**
**ये नस्तद्विचचक्षिरे ॥**

*அன்யதேவ ஆஹுः வித்யயா*
*அன்யதேவ ஆஹுः அவித்யயா ।*
*இதி சுச்ரும தீராணாம்*
*யே நஸ்தத் விசசக்ஷிரே ॥* -10-

வித்யையினால் (உபாஸனையால்) வரும் (பலனை) வேறாகத்தான் கூறுகிறார்கள். அவித்யையினால் (காரியத் தினால்) வரும் (பலனையும்) அதைவிட வேறாகத்தான் கூறு கிறார்கள். இவ்வாறு, எந்த அறிஞர்கள் எங்களுக்கு விளக் கினார்களோ அவர்களிடமிருந்து கேள்விப்பட்டிருக்கிறோம்.

### சங்கரரின் உரை

உபாஸனை செய்வதனால், (காரியங்களின் பலனை விட) வேறு ஒரு பலன் உண்டாகிறது என்று (அறிஞர்கள்) கூறு கிறார்கள். ''வித்யையினால் (அதாவது உபாஸனையினால்) தேவலோகம் (சென்றடைகிறார்கள்)'' என்ற வேதவாக்குகளி லிருப்பது (ப்ருஹதாரண்யக உபநிஷத் I-5.16) இதற்குச் சான்று. இதற்கு மாறாக அறியாமையினால் (அதாவது அவித்யையின் விளைவான காரியங்களைச் செய்வதால்) உண்டாகும் வினைப் பலன் இதைவிட வேறானது என்று இவை (மறை வாக்குகள்) சொல்லுகின்றன.

''காரியத்தினால் மூதாதையர் உலகம் (சென்று அடை கிறார்கள்)'' என்று (ப்ருஹதாரண்யக-உபநிஷத் I-5.16) கூறுவது (காண்க).

இவ்வாறு அறிஞர்கள் கூற நாம் கேட்டிருக்கிறோம். காரியம் (என்பது என்ன) என்பதையும் உபாஸனை (என்பது என்ன) என்பதையும் நமக்கு எந்தப் பெரியோர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்களோ, அவர்கள் வழியாக வந்த ஆகமம் அல்லது பரம்பரைச் செய்தி இது என்பது பொருள்.

*மந்த்ரம் - 11*

**विद्यां च अविद्यां च यस्तद्वेदोभयं सह ।**
**अविद्यया मृत्युं तीर्त्वा विद्यया अमृतं अश्नुते ॥**

*வித்யாம் ச அவித்யாம் ச யஸ்தத்வேதோபயம் ஸஹ ।*
*அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயா அம்ருதம் அச்நுதே ॥*

யார் வித்யையையும் (உபாஸனையையும்), அவித் யையும் (காரியங்களையும்) சேர்த்தே செய்கிறார்களோ, அவர் கள் அவித்யையினால் (கடமைகளைச் செய்வதனால்) மரணத் தைக் கடந்து உபாஸனையினால் இறவாமையை அடை கிறார்கள்.

### சங்கரரின் உரை

மேற்கண்ட காரணத்தால், ''வித்யாம் ச அவித்யாம் ச'' (என்ற இந்த மந்த்ரத்தில் வரும் சொற்களுக்கு) ''தேவதா உபாஸனையும், காரியமும், என்பது பொருள். இவ்விரண்டும் சேர்ந்தே பயிலப்பட வேண்டும் என்று எவன் அறிகின்றானோ, (இவ்விரண்டையும்) சேர்த்தே செய்கின்ற அத்தகைய அவனுக்கே (இரண்டு பலன்களும்) முறையே சேர்ந்து உண்டாகின்றன என்று கூறப்படுகிறது.

அறியாமையின் (அவித்யையின்) காரணமாக நேர்ந்த அக்னி ஹோத்ரம் முதலிய காரியங்களினால், இயற்கை யிலேயே ஏற்பட்டிருக்கிற, 'மரணம்' என்ற சொல்லால் குறிப் பிடப்பட்ட காரியங்களைக் கடந்து, ''வித்யை'' என்று அழைக் கப்படுகிற தேவதா உபாஸனையினால் தேவதைகளாகி மரண மின்மையை அடைகிறான். (அவன்) தேவதைகளாகவே ஆகி விடுவதைத் தான் ''அம்ருதம்'' (மரணமின்மை) என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது. (எனவே, 'மரணம்' என்பது இங்கே காரியம் முதலியவற்றின் பிடியிலிருந்து விடுபட்டு செல்வதைக் குறிக்கிறது, சாவைக் குறிக்கவில்லை. ''அம்ருதம்'' என்பதற்கு முழு முக்தி என்பது இங்கு பொருளன்று. தேவதைகளை உபாஸிப்பதால் அந்தந்த தேவதைகளாகவே ஆகிவிடுகின்ற நிலைதான் சொல்லப்படுகின்றது.

*மந்த்ரம் - 12*

**சங்கரரின் முன்னுரை**

இப்பொழுது, ''அவ்யாக்ருதம்'' என்ற வெளிப்படாத நிலையிலிருக்கின்றதும் ப்ரக்ருதி என்று அழைக்கப்படுகின்றது-மான உலகத்தின் பௌதிகக் காரணத்தையும், ''வ்யாக்ருதம்'' (வெளிப்பட்ட காரிய நிலையை அடைந்த ஹிரண்யகர்ப்பர்) என்ற (தேவதையையும்) சேர்த்தே உபாஸனை செய்ய ஆசைப் படுகின்றவர்களின் பொருட்டு, (இவற்றைத்) தனித்தனியே (உபாஸிப்பது) இகழப்படுகிறது.

**अन्धं तमः प्रविशन्ति येऽसंभूतिं उपासते ।**
**ततो भूय इव ते तमो य उ संभूत्याँ रता : ॥**

*அந்தம் தம: ப்ரவிசந்தி யே அஸம்பூதிம் உபாஸதே ।*
*ததோ பூய இவ தே தமோ ய உ ஸம்பூத்யாம் ரதா: ॥ -12-*

(காரணநிலையிலிருக்கும்) வெளிப்படையாகத் தெரியாத (பிரக்ருதியை அல்லது இயற்கையை) உபாஸிப்பவர்கள் குருட்டு இருட்டை அடைகிறார்கள். ஆனால், (காரியமாக) வெளிப் பட்ட (ஹிரண்யகர்ப்பரிடத்தில்) மகிழ்பவர்கள் அதைவிட இன்னும் மிகுதியான இருட்டை அடைகிறார்கள்.

## சங்கரரின் உரை

உற்பத்தியாகிவிட்ட, (ஏற்கனவே) உண்டாகி விட்ட விளைவு 'ஸம்பூதி'யாகும். அதற்கு மாறானது (கருநிலையில் உள்ள, காரணமான) 'அஸம்பூதியாகும். அது 'ப்ரக்ருதி' (அல்லது மாயை) எனப்படும். (அதாவது உலகத்திற்குப் பௌதிக முதற் காரணம்) எனப்படும். அது அவித்யை; (உலகப் பொருட்களாக) இன்னும் தோற்றம் கொள்ளாதது. 'அவ்யா க்ருதம்' என்ற பெயருடையது. அத்தகைய அஸம்பூதியை, 'அவ்யாக்ருதம்' என்ற பெயருடைய இயற்கையை, அவித்யை யை, ஆசைக்கும் வினைக்கும் வித்தாக இருக்கின்ற ஒன்றை, அறிவற்ற அந்த (சடப்) பொருளை, எவர் வழிபடுகிறார்களோ, அவர்கள் அதற்கு ஏற்ப (அந்த வழிபாட்டின் தன்மைக்கு ஏற்ப) குருட்டு இருட்டை, (தாழ்ந்த நிலையை) அடைகிறார்கள். அதை விட இன்னும் அதிகமான இருட்டை, மேற்சொன்ன காரணமான அஸம்பூதியின் காரிய (வெளிப்பாடான) காரியப் பிரம்மத்தை, ஹிரண்யகர்ப்பர் என்ற பெயருடைய (தேவதையை) உபாஸிப் பவர்கள் அடைகிறார்கள்.

### *மந்த்ரம் - 13*

## சங்கரரின் முன்னுரை

இப்பொழுது, (மேற் சொன்ன) இரண்டு உபாஸனை களின் ஒருங்கிணைப்பிற்கு முன்னோடியாக, (அவற்றின்) வேறுபட்ட தனித்தனிப்பலனை (கீழ்வரும் மந்த்ரம்) எடுத் துரைக்கிறது.

अन्यदेव आहुः संभवात्
अन्यदाहुः असंभवात् ।
इति शुश्रुम धीराणां
ये नस्तद्विचचक्षिरे ॥

*அன்யதேவ ஆஹு: ஸம்பவாத்*
*அன்யதாஹு: அஸம்பவாத் ।*
*இதி சுச்ரும தீராணாம்*
*யே நஸ்தத் விசசக்ஷிரே ॥* -13-

''ஸம்பூதியை (ஹிரண்யகர்ப்பரை) உபாஸிப்பதன் மூலம் வரும் பலனை வேறாகவும், அஸம்பூதியை (பிரகிருதி என்ற இயற்கையை) உபாஸிப்பதன் பலனை வேறாகவும் சொல்லி யிருக்கிறார்கள்'' என்று எங்களுக்கு இதை விளக்கிச் சொன்ன பெரியோர்களின் (வாக்காகக்) கேள்விப்பட்டிருக்கிறோம்.

**சங்கரரின் உரை**

'அணிமா' முதலிய (எட்டு)[1] ஆற்றல்களை அடையாள மாகக் கொண்டது, காரியமாக வெளிப்பட்ட ஹிரண்யகர்ப்பரை உபாஸிப்பதன் பலன். (பிரக்ருதி என்ற பௌதீக முதற்காரணத் தை உபாஸிப்பதன் பலனிலிருந்து) இது வேறானது என்று (இவையெல்லாம் எங்களுக்கு) விளக்கிச் சொன்ன (பெரியோர் களிடமிருந்து கேட்டிருக்கிறோம்) என்பது பொருள்.

அதே போன்று ''அஸம்பூதி'' (வெளிப்படாத காரண நிலையில் இருப்பது என்று சொல்லப்படுகிற பிரகிருதி அல்லது

---

1. சிறுத்தல், வளர்தல், இலேசாதல், கனத்தல், மாட்சிமை, நினைத்தை அடைதல், வசப்படுத்துதல், நினைத்தபடி செல்லுதல் என்ற எட்டு யோக ஸித்திகள்.

இயற்கையை உபாஸிப்பதன் பலனும்) வேறானது. (அதாவது) ''குருட்டு இருட்டை அடைகிறார்கள்'' என்று இதே உப நிஷத்தில் சொன்னது போல், பிரகிருதி என்ற ஜடப் பொரு ளான முதற் காரணத்தில் ஒடுங்குகிறார்கள் என்பது அவர்கள் அடையும் பலன். இப்படி ஒரு நிலையையே அவர்கள் வீடுபேறாகக் கருதி, இதற்காகப் பிரகிருதி என்ற மாயையை உபாஸனை செய்கிறார்கள் என்று புராணங்களை விளக்க வந்த (பெரியோர்களால்) கூறப்படுகிறது. இவ்வாறு, பிரகிருதியை யும், ஹிரண்யகர்ப்பரையும் உபாஸிப்பதன் பலனை எங்களுக்கு விளக்கிய பெரியவர்களிடமிருந்து கேட்டிருக்கிறோம் என்பது இங்கு கருத்து.

*மந்த்ரம் - 14*

**சங்கரரின் முன்னுரை**

இவ்வாறு இருப்பதால், பிரகிருதி, ஹிரண்ய கர்ப்பர் (என்ற இவர்களைக் குறித்த) உபாஸனைகளின் கூட்டுச் சேர்க் கையானது மிகவும் பொருத்தமானதே. அவை இரண்டுமே ஒருவருக்கே ஒரே பலனைக் கொடுப்பதாலும் (இது பொருந்தும்). (கீழ்வரும் மந்த்ரம்) இதைக் கூறுகிறது.

**संभूतिं च विनाशं च**
**यस्तद्वेद उभयं सह ।**
**विनाशेन मृत्युं तीर्त्वा**
**असंभूत्याऽमृतं अश्नुते ।।**

*ஸம்பூதிம் ச விநாசம் ச*
*யஸ் தத் வேத உபயம் ஸஹ ।*
*விநாசேன ம்ருத்யும் தீர்த்வா*
*அஸம்பூத்யா அம்ருதம் அச்நுதே ॥* *-14-*

ஹிரண்யகர்ப்பர், பிரகிருதி என்ற இரண்டையும் சேர்த்தே எவன் உபாஸிக்கின்றானோ, அவன் ஹிரண்யகர்ப்ப (உபாஸனையினால்) 'ம்ருத்யு' (மரணம் என்ற தீமையைக்) கடந்து, பிரகிருதி (உபாஸனையால்) பிரகிருதியில் ஒடுங்குவது என்ற மரணமின்மையை அடைகிறான்.

## சங்கரரின் உரை

அழிவு என்பது உண்டாக்கப்பட்ட பொருளின் இயல்பு. அது அந்த இயல்பினையுடைய பொருளோடு ஒன்றாக்கப்பட்டு ''அழிவு'' (விநாசம்) என்று இங்கு பேசப்படுகிறது. (அழிவு என்ற ஹிரண்யகர்ப்பரைக் குறித்த) உபாஸனையால், சிறுமை, குற்றம், ஆசை முதலிய குற்றங்களின் கூட்டமான (மரணத்தை) கடக்கலாம். அதாவது, ஹிரண்யகர்ப்பரை வழிபடுவ தால்தான் அணிமா (அணு அளவு வடிவம்கொள்வது முதலிய எட்டு ஆற்றல்களைப் பெறுதல் என்ற பலன் உண்டாகிறது) என்பதனால், அத்தகைய ஆற்றல்கள் இல்லாமலிருத்தல் என்ற ''ம்ருத்யு''வை (மரணத்தைத்) தாண்டி, பின் ''அவ்யாக்ருதம்'' (வெளிப்படாத காரண நிலையிலுள்ள பிரகிருதி என்ற அந்த உலக முதற்காரணத்தில்) ஒடுங்குதலை அடையாளமாகக் கொண்ட அழிவின்மையை (அம்ருதத்தை ஒருவன்) அடைகிறான்.

இவ்விடத்தில், ''ஸம்பூதிம் ச விநாசம் ச'' (என்ற மந்த்ரத்தில்) ''ஸம்பூதிம்'' என்பதற்கு முன்னால் 'அ' என்ற எழுத்து விடுபட்டது என்று அறிய வேண்டும். எனவே அதை ''அஸம்பூதி'' என்ற சொல்லாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், பிரகிருதியில் ஒடுங்குதல் என்ற பலனைக் கூறும் மந்த்ரத்தை ஒட்டியதாக அது இருக்கின்றது.

*மந்த்ரம் - 15*

## சங்கரரின் முன்னுரை

மானுடச் செல்வம், தெய்விகச் செல்வம்[1] இவற்றால் (அதாவது முறையே கர்ம, உபாஸனைகளால்) அடையப்படும் பலன், வேதத்தினால் விளக்கப்பட்டதான 'பிரகிருதியில் ஒடுங்குதல்' என்பது முடிய ஏற்படுவதாகும். உலக வாழ்க்கை என்ற ஓட்டம் இவ்வளவுதான். (பிரகிருதி உபாஸனையும் ஹிரண்யகர்ப்ப உபாஸனையும் அதில் அடங்கிவிடும்). இதற்கு மேலே, முன்னால் கூறப்பட்ட ''எல்லாம் தானாகவே (ஆத்மாவாகவே) ஆனதைத் தெரிந்து கொண்டவனுக்கு'' என்ற யாதுமாகி நிற்றல் என்பதே, அனைத்து ஆசைகளையும் துறத்தல், மெய்யறிவில் ஊன்றி நிற்றல் என்ற (ஞான நிலையின்) பலன். இவ்வாறு, இரண்டு வகையாக, (அதாவது) செயல் செய்வது, செயலைத் துறப்பது என்ற (இரண்டு வகையான) வேதத்தின் பொருளானது இங்கு விளக்கப் பட்டது. இவ்விடத்தில், 'செய்' என்ற கட்டளை (விதி), ''செய்யாதே'' என்ற தடையுத்தரவு (நிஷேதம்) என்ற (இருவகைக் கடமையை) இலக்கணமாகக் கொண்ட வேதம், அதன் பொருளான 'காரியங்களைச் செய்தல்' (பிரவ்ருத்தி) என்ற அதனை முழுவதையும் விளக்கும் பொழுது, ப்ரவர்க்யம் முடிய உள்ள பிராம்ஹணம்[2] (என்ற வேதப்பகுதி) உபயோகப் படுத்தப்பட்டது.

(இதற்கு வேறாக) காரியங்களைத் துறத்தலை நோக்க மாகக் கொண்ட வேதத்தின் பொருளை விளக்க முற்படு கையில், இதற்கு மேல் ப்ருஹதாரண்யகம் என்ற உபநிஷத் (அல்லது வேதாந்தம்) உபயோகப்படுத்தப்படுகிறது.

---

1. பசுக்கள், நிலம், பொன் முதலியவை மானுடச் செல்வம்; தேவதைகளை உபாஸிப்பது தெய்வீகச் செல்வம்.
2. சடங்குகளை விளக்கும் வேதப்பகுதி பிராம்ஹணம் எனப்படும். மெய்யறி வைக் கூறும் வேதப்பகுதி உபநிஷத் அல்லது வேதாந்தம் எனப்படும்.

(தாயின்) கருவில் புகுவது தொடங்கிச் சுடுகாட்டுக்குப் போவதுவரை, காரியங்களைச் செய்து கொண்டு (அவற்றை), காரியப் ப்ரஹ்மமான (ஹிரண்யகர்ப்பரைக்) குறித்துச் செய்யப் படுகிற உபாஸனையோடு இணைத்துப் பயின்று கொண்டு, (நூறு ஆண்டுகள்) வாழ விரும்ப வேண்டும். இந்த முறையில், உபாஸனையையும் காரியங்களையும் சேர்த்தே பயிலும் ஒருவன், 'காரியம் செய்வது' என்ற அவித்யையால் ஏற்படும் செயல்களைக் கடந்து, (ஹிரண்யகர்ப்பர் முதலிய தேவதை களைக் குறித்த உபாஸனையாகிற) ''வித்யை''யினால் தேவத் தன்மையை அடைகிறான் என்று இந்த ஈசாவாஸ்ய உபநிஷத் (மந்த்ரம் : 11) முன்னரே குறிப்பிட்டது (நினைவிருக்கலாம்).

இந்த இடத்தில், எந்த வழியினால் (மேற் சொன்ன) இறவாமையை (ஒருவன்) அடைகிறான் என்று சொல்லப்படு கிறது. சூரிய மண்டலத்தில் காணப்படும் தத்துவமும் நமது வலது கண்ணில் (காணப்படும்) தத்துவமும் இவ்விரண்டும் மெய்ப்பொருளின் (இரு தோற்றங்களாகும்). (பிருஹ தாரண்யக-உபநிஷத் V-5.2).

இவ்விரண்டு தத்துவங்களையும் ஹிரண்யகர்ப்பராக உபாஸனை செய்கிறவனும், முன் சொல்லப்பட்ட காரியங் களைச் செய்கிறவனும், ஆன அந்த ஒருவனே கடைசிக் காலம் வந்துற்றபோது, மெய்ப் பொருளை அடையும் வழி ஒன்றை ''தங்கமயமான பாத்திரத்தினால்'' என்ற (அடுத்த 15-வது மந்த்ரத்தினால் தன் நலத்திற்காக) வேண்டுகிறான்.

*மந்த்ரம் - 15*

**हिरण्मयेन पात्रेण सत्यस्यापिहितं मुखम् ।**
**तत्त्वं पूषन् अपावृणु सत्यधर्माय दृष्टये ॥**

*ஹிரண்மயேன பாத்ரேண*
*ஸத்யஸ்ய அபிஹிதம் முகம் ।*
*தத் த்வம் பூஷன் அபாவ்ருணு.*
*ஸத்ய தர்மாய த்ருஷ்டயே ॥* -15-

உண்மையின் முகம் தங்கமயமான தட்டினால் மறைக்கப் பட்டிருக்கிறது. ஏ! சூரிய பகவானே! தருமத்திலும் ஸத்தியத் திலும் ஈடுபட்டவனான என் பார்வைக்காக அதை நீர் நீக்கி யருளும்!

**சங்கரர் உரை**

தங்கம் போல் ஒளிமயமானது (அந்தத் தட்டு) என்பது பொருள். மறைக்கும் (தன்மையுள்ள) அந்தத் தட்டினால் சூரிய மண்டலத்திலிருக்கும் மெய்ப் பொருளின் முகம் மூடப் பட்டிருக்கிறது. ஏ! பூஷன் ! (சூரியதேவதையே). உண்மை பேசுவதையே இயல்பாகக் கொண்ட என் பொருட்டு (அந்த மறைப்பை) நீக்கியருள்வீராக!

அல்லது (இதற்கே வேறு வகையாகப் பொருள் கொண்டால்), உள்ளது உள்ளபடி தருமத்தைக் கடைப்பிடிக்கிற (எனக்கு), மெய்ப்பொருளான உன் காட்சி கிடைக்கும் பொருட்டு, (அந்த மூடியை நீக்கியருள்வீராக!)

*மந்த்ரம் - 16*

**पूषन् एकर्षे यम सूर्य प्राजापत्य व्यूह रश्मीन् समूह तेजो ।**
**यत्ते रूपं कल्याणतमं तत्ते पश्यामि**
**योऽसावसौ पुरुषः सोहमस्मि ॥**

*பூஷன் ஏகர்ஷே ஸுர்ய ப்ராஜாபத்ய*
*வ்யூஹ ரச்மீன் ஸமுக தேஜோ ।*
*யத்தே ரூபம் கல்யாணதமம் தத்தே பச்யாமி*
*யோ அஸாவஸெள புருஷ: ஸோஹமஸ்மி ॥* -16-

ஏ! பூஷன்! (உலகுக்கு) ஒரு முனிவனே! தரும தேவதையே! சூரியனே! பிரஜாபதியின் மைந்தனே! உன் கிரணங்களைத் தொலைவில் செலுத்து! உன் சூட்டைச் சுருக்கிக் கொள்! மிகவும் நலம் தரும் அந்த உன் உருவத்தை நான் பார்க்கிறேன்! (உன் மண்டலத்திலிருக்கும்) எந்த ஒரு பரம்பொருள் உண்டோ, நான் அதாக இருக்கிறேன்.

## சங்கரரின் உரை

ஏ! பூஷன்! (சூரிய பகவானே!) உலகத்தை ஒளி ஊட்டி வளர்ப்பதால் (உனக்கும்) 'பூஷா' (என்று பெயர் வந்தது). ஒருவனாக வளையவருவதால் (நீ) ஒரு தனிமுனிவன். தனியொரு முனிவனே! எல்லாவற்றையும் அடக்கி ஆள்வதால் யமனாக இருப்பவனே! அவ்வாறே, கிரணங்களின் உயிரையும் ஸாரத்தையும் தன்னுள்ளே உடைமையாக்கி (ஈர்த்துக் கொண்டிருப்பதால்), 'சூர்யன்' என்று பெயர் பெற்றவனே! பிரஜாபதியின் மகனே! உன்னுடைய (சூடான) கிரணங்களைத் தொலைவில் அகற்றிக் கொள்! கொளுத்தும் உன்னுடைய வெயிலைச் சுருக்கி அடக்கிக்கொள்!

மிகுந்த மங்களத்தைச் செய்கின்ற, (பெரும்) நன்மையைச் செய்யக்கூடிய உன்னுடைய வடிவத்தை, உன்னுடைய அருளினால் நான் பார்க்கிறேன். மேலும், நான் உன்னை ஒரு வேலைக்காரன் (தன் தலைவனை வேண்டுவதுபோல்) கெஞ்சி இறைஞ்சவில்லை. எந்த ஒரு புருஷன் (பூ : புவ: ஸுவ: என்ற)[1] வியாகிருதிகளைத் தன் உறுப்புக்களாகக் கொண்டிருக்கிறானோ, எவன் சூரியனான உன்னுள்ளே விளங்குகிறானோ, அந்தப் புருஷனாக (பரம்பொருளாக) நான் இருக்கின்றேன். புருஷ (மனித) வடிவத்தில் அவன் இருப்பதால் அவன்

---

1. இந்தப் பரம்பொருளுக்கு ''பூ'' என்ற பூமியே தலையாகும். ''புவ'' என்ற இடைவானமே கைகள். ''ஸுவ'' என்ற விண்ணுலகம் காலாகும். (பிருஹதாரண்யக - உபநிஷத் (V - 5.3)

'புருஷன்' (எனப்படுகிறான்). எல்லா உயிர்களுக்குள்ளும் உயிராகவும் அறிவாகவும் இருப்பதாலும், உலகம் அனைத்தை யும் நிறைத்த முழுமையாக (பூர்ணமாக) இருப்பதாலும் ''புருஷன்'' எனப்படுகிறான். இதய வெளியில் படுத்திருப் பதாலும் ''புருஷன்'' (எனப் பெயர் பெற்றான்).

*மந்த்ரம் - 17*

**இறக்கும் மனிதரின் வேண்டுகோள்**

**वायुः अनिलं अमृतं अथेदं भस्मान्तँ शरीरम् ।**
**ओं क्रतो स्मर कृतं स्मर क्रतो स्मर कृतं स्मर ॥**

*வாயு: அநிலம் அம்ருதம் அதேதம்*
*பஸ்மாந்தக்ம் சரீரம் ।*
*ஓம் க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர*
*க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர ॥* -17-

என்னுடைய (உயிர்) மூச்சு, என்றுமுள்ள தெய்வீக (முக்கிய) உயிர்க்காற்றை அடையட்டும். இந்த உடல் சாம்பலா கட்டும். ஓம்! மனதே! நினைவுபடுத்திக் கொள். (கடந்த காலத் தில்) செய்ததை நினைவு படுத்திக் கொள். மனதே! நினைவு படுத்திக் கொள்! செய்ததையெல்லாம் நினைவு படுத்திக் கொள்!

**சங்கரரின் உரை**

இறக்கப்போகும் என்னுடைய உயிர் மூச்சானது, உடல் என்ற கட்டுப்பாட்டை உதறிவிட்டு, அதன் தெய்விக இயல் பானதும், யாதுமாகி நின்றதும், அழியாததும், 'ஸூத்ராத்மா' (உலகங்களைச் சேர்த்துக் கட்டியிருக்கும் நூல் என்று பெயர் பெற்றதும்) ஆன தெய்வீக உயிர்க்காற்றை அடையட்டும் என்பது இந்த மந்த்ரவாக்கியத்தில் சொல்லாமல் விட்ட பகுதி.

உபாஸனையினாலும், காரியங்களினாலும் பண்படுத்தப்பட்ட இந்த நுண் உடம்பும் மேல் நோக்கி எழட்டும் என்பதும் பெறப் பட்டது. ஏனெனில் (தான்) போகும் பாதையை இவன் விரும்பிக் கேட்பதாக (அடுத்துவரும் கடைசி மந்த்ரம்) கூறு கிறது. இந்தத் தூல உடல் நெருப்பில் இடப்பட்டு சாம்பலா கட்டும். (தூல உடல் இந்த உலகிலேயே அழிகிறது. சூக்ஷ்ம உடல்தான் வெளிச் செல்கிறது).

'ஓம்' என்று (மந்த்ரத்தில் வரும் சொல்), உபாஸனைக்கு ஏற்ப, இதைப் பரம்பொருள் தனது சின்னமாகக் கொண்டிருப் பதால், ''அறிவு'' என்று அழைக்கப் படுவதும், உண்மையே வடிவானதுமான (அந்தப்) பரம்பொருளோடு ஒன்றாக்கிப் பேசப்படுகிறது. (எதையும்) ''இதுவோ, அதுவோ'' என்று ஆராயும் ஏ! மனதே! நினைத்துப்பார்! அதற்குரிய நேரம் வந்து விட்டதால் அதை நினைத்துப்பார்! ''மனதே! நினை! செய்ததை நினை!'' என்று திருப்பித்திருப்பிச் சொன்னது, பரிவின் காரணமாக.

*மந்த்ரம் 18*

**சங்கரரின் முன்னுரை**

மறுபடி வேறொரு மந்த்ரத்தினால் தான் செல்ல வேண்டிய பாதையைக் குறித்து மரண நேரத்தில் மனிதன் வேண்டுகிறான் :

**अग्ने नय सुपथा राये अस्मान्**
**विश्वानि देव वयुनानि विद्वान् ।**
**युयोध्यस्मज्जुहुराणं एनः**
**भूयिष्ठां ते नमउक्तिं विधेम ।।**

*அக்னே நய ஸுபதா ராயே அஸ்மான்*
*விச்வானி தேவ வயுநானி வித்வான்'*
*யுயோத்யஸ்மஜ்-ஜுஹுராணம் ஏன:*
*பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம ॥ -18-*

அக்னியே! தேவனே! எங்களுடைய எல்லாச் செயல்களையும் (அல்லது உபாஸனைகளையும்) அறியும் நீ, மேற்சொன்ன தர்மத்தின் பலன்களோடு கூடிய எல்லைகளை, (நல்வினைப் பலன்களாகிற) செல்வத்தை நுகர்வதன் பொருட்டு மங்களமான பாதையில் என்னை அழைத்துச் செல்வாயாக! எங்களிடமிருந்து எல்லா வஞ்சனையான பாவங்களையும் நீக்குவாயாக! உனக்கு நிறைய வாழ்த்துக்கள் கூறுகிறோம்!

### சங்கரரின் உரை

ஏ! அக்னியே! மங்களமான வழியில் (எங்களை) அழைத்துச் செல்வாயாக! ''மங்களமான'' என்ற அடைமொழி, (அதற்கு மாறான) தெற்கு வழியைத் தவிர்ப்பதன் பொருட்டு. போக்கும் வரவுமான (பிறப்பு இறப்புக்களுடன் கூடிய) தெற்குப் பாதையினில் சலிப்புற்றிருக்கிறேன். எனவே, உன்னை மறுபடி மறுபடி வேண்டிக் கொள்கிறேன். போக்கும் வரவும் இல்லாத மங்களமான பாதையில் அழைத்துப் போவாயாக! (எதற்காக?) செல்வத்தின் பொருட்டு; (அதாவது) நல்வினைப்பயனை நுகர்வதன் பொருட்டு என்பது பொருள்.

ஏ! தேவனே! மேற்சொன்ன அறப் பயன்களுடன் கூடின எங்களுடைய எல்லாக் காரியங்களையும் உபாஸனைகளையும் நீ அறிந்திருக்கிறாய். மேலும், எங்களிடமிருந்து வஞ்சகமான பாவங்களை நீக்கி அருள்வாயாக! அதனால், நாங்கள் தூய்மை பெற்று, விரும்பியதை (எல்லாம்) அடைவோம் என்பது

கருத்து. இப்பொழுது நாங்கள் (உடலால்) உனக்குப் பணி விடை செய்யச் சக்தியற்றவர்களாயிருக்கிறோம். அதனால், உனக்குப் பல தோத்திரங்களைச் சொல்கிறோம். உன்னைத் தோத்திரங்களினால் போற்றுகிறோம் என்பது பொருள்.

**சங்கரரின் பின்னுரை**

''அவித்யையினால் மரணத்தைக் கடந்து, வித்யையினால் அம்ருதத்தை அடைகிறார்கள்'' (மந்த்ரம் : 11) என்றும், ஹிரண்யகர்ப்ப உபாஸனையினால் மரணத்தைக் கடந்து ப்ரக்ருதி உபாஸனையினால் இறவாமையை அடைகிறார்கள் (மந்த்ரம் : 14) என்றும், (உபநிஷத் கூறியதைக்) கேட்டு, சிலர் ஐயப்பாட்டைக் கொள்கிறார்கள். எனவே அந்த (ஐயப்பாட்டைப்) போக்குவதற்காகச் சுருக்கமாக ஓர் ஆய்வு செய்கின்றோம்.

இந்த ஐயப்பாடு ஏன் (எழுந்தது)? (முதலில்), ''வித்யை'' என்ற சொல்லினால், அதன் நேர்ப் பொருளான மெய்ப்பொருளறிவு ஏன் (சங்கரரின் உரையில்) எடுத்துக் கொள்ளப்படவில்லை? (அதே போல ''அம்ருதம்'' என்ற சொல்லுக்கு) ''இறவாமை'' (அல்லது மோக்ஷம்) என்ற நேரடியான பொருள் ஏன் கொள்ளப்படவில்லை?

(இந்தக் கேள்விக்குச் சங்கரர் கூறும் பதில்) : மேற் சொல்லப்பட்ட மெய்ப்பொருளறிவிற்கும்; உலகத்தை உண்மை என்று மயங்கி அதில் காரியங்கள் (செய்வதற்கும் ஒன்றுக் கொன்று) முரண்பாடு இருப்பதால், இரண்டையுமே ஒருங்கிணைத்துப் (பயில்வது) என்பது பொருந்தாது.

(மறுபடி கேள்வி) : உண்மை. ஆனால், (அப்படிப்பட்ட) முரண்பாடு ஒன்றும் (எங்களுக்குக்) காணப்படவில்லையே?

முரண்படுவதும் முரண்படாமலிருப்பதும் மெய்ந்நூல்களை (வேதத்தை) ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. (அவித்யை என்ற) காரியத்தைச் செய்வதும், (வித்யை என்ற) உபாஸனை யைப் பயிலுவதும் எப்படி மெய்ந்நூலையே (வேதத்தையே) அடிப்படையாகக் கொண்டிருக்கிறதோ, அதே போலத்தான் (பரம்பொருளைப் பற்றிய மெய்யறிவு, காரியம் இவை இரண்டிற்கும் இடையேயுள்ள) முரண்பாடு இருப்பதும் முரண் பாடு இல்லாமலிருப்பதும் வேதத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன).

மேலும் (உதாரணமாக) ''ஓர் உயிரையும் கொல்லக் கூடாது'' என்று மெய்ந்நூல்களினால் அறியப்பட்ட ஒன்று, மறுபடி (அதே) மெய்ந்நூல்களினாலேயே ''வேள்விகளில் உயிர்ப்பலி கொடுக்கலாம்'' என்று மறுக்கப்பட்டிருக்கிறது. இது போலவே மெய்யறிவிற்கும் காரியத்திற்கும் இடையே (ஒற்றுமை) இருக்கலாம். மெய்யறிவிற்கும் காரியத்திற்கும் (முரண்பாடில்லாமல்) ஒருங்கிணைப்பும் ஏற்படலாம்.

சங்கரரின் பதில் : (மேற்சொன்ன) இது சரியன்று. மெய்யறிவும் காரியமும் வெவ்வேறு நோக்கங்களைக் கொண்டவையாய், (ஒன்றுக் கொன்று) நேர் எதிரானவை என்று வேதம் (கடோபநிஷத் : I-2.4) கூறுகின்றது.

கேள்வி : ''மெய்யறிவும், பொய்யறிவும்'' என்ற (ஈசாவாஸ்ய) உபநிஷத் வாக்கினால் இவை (ஒன்றுக்கொன்று) நேர் எதிரானவை அல்ல என்று கூறினால்?

பதில் : அன்று; (மெய்யறிவும் செயற்பாடும்) (என்ற இவை இரண்டும்) அதாவது, ஞானமும், கர்மமும், தமது காரணத்திலும், தன்மையிலும், பலனிலும் (ஒன்றுக் கொன்று) நேர் எதிராக இருப்பதால் மெய்யறிவும் பொய்யறிவும் நேர்

எதிரானவையோ அல்லவோ என்று (ஐயப்படும்) மாறு நிலை கள் இருக்கவே முடியாது.[1]

கேள்வி : மெய்யறிவையும் (பொய்யறிவின் விளை வான) காரியங்களையும் சேர்ந்தே (பயில வேண்டும்) என்ற சட்டம் (உபநிஷத்தில்) இருப்பதால், (இவை ஒன்றுக்கொன்று) நேர் எதிரானவை அல்ல என்பதே (உண்மை) என்றால்?

பதில்: (அவ்வாறு) அன்று. இவை சேர்ந்து இருக்கும் வாய்ப்பு ஏற்பட இடமே இல்லை.

கேள்வி : ஞானமும் கர்மமும் (ஒரே) (சமயத்திலல்லாமல்) அடுத்தடுத்து வெவ்வேறு சமயங்களில் ஓர் இடத்தில் இருக்கலாமே என்றால்?

பதில் : இல்லை. (மெய்யறிவு) தோன்றும் போதே அறியாமை மறைந்து விடுவதால், (மெய்யறிவு தோன்றிய) அதே இடத்தில் அறியாமை இருக்க முடியாது. ''தீ சூடானது, ஒளியும் பொருந்தியது'' என்ற அறிவு உண்டாகிவிட்ட பொழுது, எந்த இடத்தில் (தீ என்ற) அறிவு உண்டாயிற்றோ, அதே இடத்தில் ''தீ குளிர்ச்சியானது, ஒளியில்லாதது'' என்ற அறியாமையின் தோற்றம் ஏற்படவே முடியாது. (உண்மை தெரிந்த பிறகு) ஐயப்பாடோ அறியாமையோ இருக்கவே முடியாது. ''எவனிடத்தில் எல்லாப் பொருளும் (அவனு டைய) ஆத்மாவாகவே ஆயிற்றோ, அவ்வாறு ஒருமையைப் பார்க்கிற அவனிடத்தில் மயக்கமேது? துக்கம் ஏது? (ஈசா வாஸ்ய-உபநிஷத் : 7) என்று அறிவின் மயக்கமும் துக்கமும் (மெய்யறிவு தோன்றியபின்) இருக்க முடியாது என்று வேதம் கூறுகிறது.

---

1. காரியங்களுக்குக் காரணம் ஆசை; மெய்யறிவிற்குக் காரணம் ஆசைகளைத் துறத்தல். காரியங்களின் தன்மை, அறிவற்ற ஜடத்தன்மை; மெய்யறிவின் தன்மை ஒளியுள்ள விளக்கம். காரியங்களின் பலன் இக பரலோக இன்பம்; மெய்யறிவின் பலன் முக்தி.

''அம்ருதத்தை (மரணமில்லாத நிலையை) அடை கிறான்'' என்ற (உபநிஷத்) வாக்கியம் மோக்ஷத்தைக் குறிப்பிட வில்லை. இருப்பதற்குள் மிக நீண்ட காலம் (அதன் பலன் இருக்கும்) என்று வேறு குறுகிய காலப் பலன்களோடு ஒப்பிட்டுச் சொன்னதாகும்.

''வித்யை'' என்று (உபநிஷத் மந்த்ரத்தில் வரும்) சொல் லினால், மெய்ப்பொருளைப் பற்றிய மெய்யறிவு (பிரம்ம-ஞானம்) குறிப்பிடப் படுவதாகப் பொருள் கொண்டால், ''ஹிரண்மயேன'' (தங்கமயமான) என்றது முதலாகச் சொல்லப் பட்ட வழியும் கதவும் வேண்டப்படுகின்ற செயல் பொருத்தம் இல்லாததாகிவிடும். (எனவே உபாஸனை என்று இந்த இடங் களில் பொருள் கொள்ள வேண்டும்). அதனால், மெய்ப் பொருளறிவை (பிரம்ம-ஞானத்தை) உபாஸனையோடோ (அல்லது காரியத்தோடோ) இணைக்க முடியாது என்று எவ்வாறு எங்களால் (மேற்கூறியவாறு விளக்கப்பட்டதோ), அதுவே மந்த்ரங்களின் பொருள் என்று இதோடு எல்லாம் நன்கு அமைகிறது.

**ஈசாவாஸ்ய-உபநிஷத் முற்றிற்று.**

**ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ சங்கர பகவத் பாதரால் செய்யப்பட்ட ஈசாவாஸ்ய-உபநிஷத்தின் விளக்கவுரை நிறைவு பெற்றது.**

**ஓம் தத்ஸத்**

